


1976
அக்டோபர் 31

அநல ஆண்டு
ஐப்பசி 15

## போடு புதிர்!

எங்கள் வீட்டுச் சுவர்க் கடிகாரம் ஆறு மணி அடிக்க ஐந்து விநாடிகள் எடுத்துக் கொள்ளுகிறது. அது பன்னிரண்டு மணி அடிக்க எத்தனை விநாடிகள் எடுத்துக் கொள்ளும்?

- எஸ். லலிதா



✻

"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.

மூன்று வயதே ஆகிறது...



# அதற்குள் உலகமெல்லாம் பரவிப் பெருகியுள்ள நோய் இவளைப் பீடித்துவிட்டது

நூற்றுக்கு 95 பேரைப் பாதிக்கும் நோயான பற்சிதைவு குழந்தைகளையே பெருமளவில் பீடிக்கிறது. பற்சிதைவின் காரணமாக அகாலமாக, பால் பற்கள் விழுந்து, புதிய பற்கள் முளைக்கும் பருவத்தில், பல் வளர்ச்சிக்குக் குழந்தைகளுக்குத் தனிப்பட்ட பாதுகாப்பு தேவைப்படுகிறது.

## பினகா :.ப்ளோரைட் பற்சிதைவுக்கு எதிராக நீடித்த பாதுகாப்பளிக்கிறது

பற்சிதைவை 50 சதவிகிதம் வரை :.ப்ளோரைட் குறைக்கிறது என விஞ்ஞான சோதனைகள் நிரூபித்துள்ளன. ஆகவே நாள்தோறும் காலையிலும், படுக்கை வேளை-யிலும், உங்கள் குழந்தையை பினகா :.ப்ளோரைடினால் பல் துலக்கச் செய்யுங்கள். அதன் தனிப்பட்ட, நீடித்து நிற்கும் ஆற்றல் பல் எனாமலைப் பலப்படுத்துகிறது. பற்களைச் சிதைக்கும் கிருமிகளின் வளர்ச்சியையும் வலிதரும் சொத்தையையும் தடுக்கிறது. அதுமட்டுமல்லாமல், பினகா :.ப்ளோரைடி-னால், 14 வயது வரை, தவறாமல் பல் துலக்கி வந்தால், பற்சிதைவை எதிர்க்கும் நீடித்த ஆற்றல் வந்தடைகிறது.




**பல்லுக்கு உறுதி,
பற்சிதைவுக்கு எதிரி—**

# பினகா :.ப்ளோரைட்

# காட்டரும் தோற்ருர்!

நவீன விஞ்ஞானத்தின் அற்புதப் படைப்புக்களில் ஒன்று 'விடியோ-டேப். சாதாரணமாக டேப் ரிகார்டரில் இருப்பது போன்ற கையடக்கமான டேப் தான். அதனை ஒரு ஸூட்கேஸ் அளவினதாகவே இருக்கும் விடியோ டேப் கருவியில் பொருத்தி, அக்கருவியை டெலிவிஷனுடன் இணைத்து விட்டால் டேப்பில் அலைக் கோடுகளாகப் பதிவாகியுள்ள ஒளிச் சித்திரம் டெலிவிஷன் திரையில் தெரிகிறது! ஒலியும் கேட்கிறது.

இந்த நவீன சாதனத்தின் உதவியுடன் ஃபோர்டு - கார்டர் இரண்டாவது சம்வாதத்தை அண்மையில் அமெரிக்கத் தகவல் நிலையத்தில் பத்திரிகையாளர்கள் காண முடிந்தது - வண்ணப் படமாக!

அதைப் பார்த்த போது ஏற்பட்ட முதல் எண்ணம் இதுதான்: 'ஜனநாயகம் என்ருல் இதுவல்லவோ ஜனநாயகம்; தேர்தல் பிரசாரம் என்ருல் இப்படியல்லவா கண்ணியமாக நடக்க வேண்டும்!'

கார்ட்டரோ அடிக்கடி இலேசான ஏளனப் புன்வகை மலர ஃபோர்டு ஆட்சியின் கொள்கைகளைக் கிண்டல் செய்த வாறே தமது கொள்கைகளை வலியுறுத்திக்கொண்டிருந்தார்.

இந்த விவாதம் நடப்பதற்கு மூல காரணமாக இருந்தது அமெரிக்கப் பெண் வாக்காளர் சங்கம் என்பதை நமது மாதர்கள் விசேஷமாகக் கவனிக்க வேண்டும். அமெரிக்க வாக்காளர் இரு கட்சிக் கொள்கைகளையும் நன்கு புரிந்து கொண்டு அந்த அடிப்படையில் வோட்டளிக்க வேண்டும், பெருவாரியான மக்கள் வோட்டுச் சாவடிக்கு வரவேண்டும் என்ற நோக்கத்தில் மேற்படி சங்கம் கல்வி நிதி யொன்று ஏற்படுத்தி, அதனை இதுபோன்ற நிகழ்ச்சிகளுக்குப் பயன் படுத்துகிறது.

சம்வாதம் ஃபோர்டு — கார்ட்டருக்கிடையேதான். என்ருலும், கேள்விக் கணைகளைத் தொடுத்தவர்கள் பத்திரிகைத் துறை, செய்தித் துறையில் முக்கியஸ்தர்களான மூவர். விவாதம்


கல்கி மலர் 36 இதழ் 14



தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற — எங்கள் தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்


இந்த எண்ணத்தை அடுத்து, இம் மாதிரியான சக்தி வாய்ந்த இரு அகில இந்தியக் கட்சிகள் ஏறத்தாழ சம பலத்துடன் விளங்கி, தேச நலனுக்குகந்த கொள்கைகளில் கவனம் செலுத்தி, அக்கொள்கைகளின் அடிப்படையில் விவாதங்கள் நடத்தி, தேர்தலில் போட்டியிட்டால் பாரத ஜனநாயகம் எவ்வளவு உயர்வாக இருக்கும் என்ற ஏக்கம் பிறந்தது. இவ்விதம் நடக்க முடியாமல் இடையூறு பண்ணும் தன்னலன்கள், குறுகிய நோக்கங்கள், பிரதேசப்பித்துக்கள் எல்லாம் மடியவும் மாற்றுக் கொள்கைகளின் அடிப்படையில் ஒரே ஒரு நல்ல அகில இந்திய எதிர்க் கட்சி தோன்றவும் தலைவர்கள் முயல மாட்டார்களா, அதற்கு இறையருள் கிட்டாதா என்ற தவிப்பே ஏற்பட்டு விட்டது!

இதற்கிடையில் டெலிவிஷன் திரையில் ஃபோர்டு அழுத்தம் திருத்தமாகவும் ஆணித்தரமாகவும் தமது வாதங்களை லட்சோப லட்சம் அமெரிக்க மக்களுக்கு எடுத்துரைத்துக் கொண்டிருந்தார்.

அத்துமீறிப் போய்விடாமலும் குறித்த நேரத்தில் முடிகிற மாதிரியும் நிர்வகித்தவர் ரேடியோ ஒலிபரப்புத் துறையில் பிரபலமான ஒரு பெண்மணி.

தலைவர்கள் இருவரிடையே நடந்த இந்த இரண்டாவது சம்வாதம் ஃபோர்டுக்குத் தோல்வியாகவும் கார்ட்டருக்கு வெற்றியாகவும் பொதுவாகக் கருதப் படுகிறது. இதற்கு முக்கிய காரணம், ஃபோர்டு, விவாத வேகத்தில் ஓர் அபத்தமான கருத்தினைத் தெரிவித்தது தான். ''போலந்து, யுகோஸ்லாவியா, ருமேனியா போன்ற பல கிழக்கு ஐரோப்பிய நாடுகள் ருஷ்யாவின் ஆதிக்கத்துக்கும் செல்வாக்குக்கும் அடங்கியிருக்கவில்லை; அவை சுயாட்சி பெற்றுச் சுதந்திரமாய் இயங்குகின்றன'' என்று கூறி வைத்தார். பின்னுல் அவருக்கே இது அபத்தம் என்று தோன்றி இரு தினங்களுக்குப் பிறகு வருத்தம் தெரிவித்தார். விவாத வேகத்தில் ஏற்பட்ட இந்தத் தவறு ஒன்றை ஒதுக்கி வைத்து விட்டுப் பார்த்தால், ஃபோர்ட் மிகுந்த தன்னம்பிக்கை உடையவராக, வலிமை

பொருத்தியவராக, ஒரு சக்தி வாய்ந்த ஜனநாயகத்துக்கு ஏற்ற ஆன்ம பலம் உடையவராகக் காட்சி தருகிறார். கார்ட்டரோ, ஒரு புன்னகையால் உலகையே வென்றுவிடக் கூடிய வசீகரம் உள்ளவராக, எந்த அம்சத்தையும் ஆழ்ந்து நோக்கி, அலசிப் பார்த்து நல்லதொரு முடிவுக்கு வரக்கூடியவராக, விட்டுக்கொடுக்கும்போதே அமெரிக்க நலனுக்கு வேண்டியதைச் சாதித்துக் கொள்ளும் ஆற்றலுள்ளவராகத் தென்படுகிறார்.

இந்த இரண்டாவது வாக்குவாதத்தில் அயல் நாட்டு விவகாரங்கள் பற்றியும் பாதுகாப்பு குறித்தும் கார்ட்டர் — ஃபோர்டு கொள்கைகள் அனைத்தையும் நாம் இங்கே கவனிப்பது சாத்தியமல்ல; அதற்கு அவசியமும் இல்லை.

ஆனால் உலக சமுதாயத்தைப் பாதிக்கும் ஒரு விஷயம் குறித்து நியூயார்க் டைம்ஸ் இணை ஆசிரியர் மாக்ஸ் ஃபிரான்கெல் கேட்ட ஒரு கேள்விக்கு ஃபோர்டு, கார்ட்டர் இருவரிடமுமிருந்தே திருப்திகரமான பதில் கிடைக்கவில்லை என்பதைக் குறிப்பிடுவது பொருந்தும்.

ஃபிரான்கெல் கேட்டார்: ''தேசப் பாதுகாப்புக்கென்று பலவிதமான பயங்கர ஆயுதங்களைச் செய்து குவிக்கக் கோடிக் கணக்கில் செலவு செய்கிறோம். இதைப் பெருமளவு குறைத்து, ஆக்கபூர்வமான வேறு திசைகளில் செலவழிக்குமாறு உங்களை வற்புறுத்த நமது தேசத்தின் பொருளாதாரம் இன்னும் எவ்வளவு மோசமான நிலைமையை அடைய வேண்டும், அல்லது உலகில் பின் தங்கியவர்கள் அவதியும் பசியும் இன்னும் எந்த அளவுக்கு அதிகரிக்க வேண்டும்?''

கார்ட்டர், ஃபோர்டு இருவருமே, ஆயுதங்களைக் குறைப்பது எனில் எதிராளியும், அதாவது ருஷ்யாவும் குறைக்க வேண்டும்; அப்படிக் குறைக்குமாறு அவர்களை வற்புறுத்துவதென்றால் அமெரிக்கா மிகப் பலம் வாய்ந்த உயர்ந்த நிலையில் இருந்துதான் வாதாட வேண்டும்; அப்போதுதான் ருஷ்யர்கள் மசிவார்கள் என்று நம்புகின்றனர். இதற்கு மறுபுறமாக ருஷ்யர்களும் இதே போன்ற கருத்தைக் கொண்டிருக்கிறார்கள். வல்லரசுகளுக்கிடையே உள்ள இந்தப் போட்டா போட்டியின் நிகர விளைவு உலகைச் சதா ஒரு பயங்கர அணு ஆயுதப் போர் அச்சுறுத்தி வருவதுதான்.

அமெரிக்க ஜனாதிபதி தேர்தலில் வெற்றி பெறப் போகிறவர் கார்ட்டரோ அல்லது ஃபோர்டோ, இப்போது நமக்குத் தெரியாது. ஆனால் இந்த இரண்டாவது டெலிவிஷன் விவாதத்தில் வெற்றி பெற்றவர் கார்ட்டரும் அல்ல, ஃபோர்டும் அல்ல.

வென்றவர், நியூயார்க் டைம்ஸ் இணை ஆசிரியர் மாக்ஸ் ஃபிரான்கெல்தான்!

# நோபெல் அறிஞரும் ராஜாஜியும்

இந்த ஆண்டு பொருளாதார ஆராய்ச்சிக்காக நோபெல் பரிசு பெற்ற அமெரிக்கர் திரு மில்டன் ஃபிரைட்மன்.

சிகாகோ பல்கலைக் கழகத்தைச் சேர்ந்த திரு மில்டன் ஃபிரைட்மன் சில காலம் முன்பு ராஜாஜியைத் தாம் சந்தித்தது பற்றிப் பின்வருமாறு ராஜாஜி-93 மலரில் எழுதியுள்ளார்:

''சில ஆண்டுகளுக்கு முன் இந்தியாவுக்கு நான் சென்றிருந்தபோது ராஜாஜியைச் சந்தித்தேன். என் வாழ்வில் உணர்ச்சிபூர்வமானதும் அறிவு சார்ந்ததுமான மிகப் பெரிய அனுபவம் அந்தச் சந்திப்புத்தான். தத்துவ ரீதியான ஆழ்ந்த ஞானமும் உணர்ச்சி பூர்வமான அக்கறையும் இந்தியாவை எதிர்நோக்கியுள்ள பிரச்னைகளை அலசிப் பார்க்கும் தெளிந்த மதியும் அவரிடம் கண்டேன்.



''இந்தியாவின் பண்பாடும் ஞான வாழ்வும் பற்றி எனக்குத் தெரிய வராத பல அம்சங்களை அந்தச் சந்திப்பின்போது நான் உணர்ந்து கொண்டேன்.

''இந்தியாவைப் பற்றி நான் செய்திருந்த ஆராய்ச்சிகள், அந்தத் தேசம் விடுதலை பெற்றதிலிருந்து இருந்து வந்த உண்மையான அரசியல் ஜனநாயகத்துக்கும் தனி மனிதன் சுதந்திரத்துக்கும் ஊறு விளைவிப்பவையாக இன்றைய பொருளாதாரக் கட்டுப்பாடுகளும், கொள்கைகளும் விளங்குவதாக என்னை நம்பச் செய்திருந்தன. தனிமனிதன் சுதந்திரத்தின் முக்கியத்துவம், மதிப்பு; தனிமனிதர்களின் பொறுப்பும் ஊக்கமும் இந்தியாவின் அரசியல், பொருளாதார முன்னேற்றத்தில் வகிக்கக் கூடிய முக்கிய பங்கு ஆகியவை பற்றி ராஜாஜிக்கு இருந்து வந்த நம்பிக்கையை நானும் பகிர்ந்து கொண்டேன். இந்தியாவில் வேறு எங்குமே நான் காண முடியாத அளவில் இத்துறையில் உள்ள பிரச்னைகள், சாத்தியக் கூறுகள் பற்றிய நவீனமான ஊடுருவும் ஞானத்தை அவரிடம் நான் கண்டேன்.''

அறுபத்தி நாலு வயதான டாக்டர் ஃபிரைட்மனுக்கு லட்சத்து முப்பத்தெட்டாயிரம் டாலர் பரிசை ராயல் ஸ்வீடிஷ் அகாடெமி வழங்கி யிருக்கிறது.

# ஜீவகாருண்யம்

ஜகத்குரு 27

ஸ்ரீ காஞ்சி காமகோடி சங்கராசாரிய சுவாமிகள்



தேகம் ரொம்ப இழிவானது, அதிலிருந்து கிளம்ப வேண்டும் என்று பெரியவர்கள் பாடி வைத்திருப்பதெல்லாம் உண்மைதான். ஆனால் இன்னொரு நிலையில் பார்த்தால் இந்த தேகம் என்பது ஒரு மகா அற்புதமான மெஷினாக இருக்கிறது. ஒரே மெஷினில் ஒவ்வொரு பாகம் ஒவ்வொரு தினுசான காரியத்தைச் செய்கிறது. கண் என்று ஒன்று வெளிச்சத்தையும், வர்ணங்களையும் பார்க்கிறது. காது என்று ஒன்று சப்தங்களைக் கேட்கிறது. இருக்கிறதெல்லாம் ஒரே ஆத்மா — இத்தனை அவயவங்களுக்குள்ளேயும் ஒரே ஜீவன்தான் இருக்கிறது என்றாலும் கண்ணும், காதும் கிட்டக்கிட்ட இருந்தும்கூட கண்ணால் கேட்க முடிவதில்லை; காதால் பார்க்க முடிவதில்லை. பக்கத்திலேயே வாய் என்று ஒன்று. அதற்குத்தான் ருசி தெரிகிறது. பேசுகிற சக்தியும் அதற்கே இருக்கிறது. தொண்டையில் பல தினுசாகக் காற்றைப் புரட்டி அழகாகக் கானம் செய்ய முடிகிறது. பல வஸ்துக்களைப் பிடிப்பதற்கு ஏற்ற மாதிரி கையும் விரல்களும் அமைந்திருக்கின்றன. இந்த அமைப்பு கொஞ்சம் வேறு விதமாக இருந்தாலும் இப்போது நாம் பண்ணுகிற காரியங்களைப் பண்ண முடியாது. அடி எடுத்து வைத்து மேலே மேலே போவதற்கு வசதியாகக் காலின் அமைப்பும் இருக்கிறது. நடக்கிறபோது கூடிய மட்டும் ஜீவராசிகள் நசுங்காதபடி, பூரான் மாதிரியானவற்றின் மேலேயே நாம் பாதத்தை வைத்தால்கூட அவை நெளிந்துக் கொண்டு ஓட வசதியாக உள்ளங் காலில் குழி வைத்தாற்போன்ற ஏற்பாடு ; சப்பணம் கூட்டி உட்கார வசதியாக முழங்காலில் நரம்புகளின் அமைப்பு என்று இப்படி ஒவ்வொன்றைப் பார்த்தாலும் பராசக்தி எத்தனை சூக்ஷ்மமான கற்பனையோடு ஒரு சரீரத்தைப் பண்ணியிருக்கிறாள் என்று ஆச்சரியமாக இருக்கிறது. ஆகாரத்தை ஜரிக்க ஓர் அங்கம், ஜரித்ததை ரத்தமாக்க ஓர் அங்கம், மூச்சுவிட ஒன்று, ரத்தத்தைப் 'பம்ப்' பண்ண ஒன்று—எல்லாவற்றுக்கும் மேலே சகல காரியங்களையும் டைரக்ட் பண்ணி, கண்ட்ரோல் பண்ணும் மூளை — என்றெல்லாம் விசித்திர விசித்திரமாகப் பகவான் சரீரத்தைக் கல்பித்திருக்கிறார். சதை, ரத்தம், மஸில்ஸ், நரம்பு, எலும்பு என்ற ஒவ்வொன்றுக்கும் ஒரு 'பர்பஸ்' இருக்கிறது. எலும்புக்குள்ளேகூட மஜ்ஜை என்ற ஜீவ சத்து ஓடுவது ஓர் அதிசயம். மனித சரீரத்தில் இருக்கும் கோடிக்கணக்கான செல்களில் ஒவ்வொன்றும் ஓர் அற்புத லோகம். இப்படித் தனித் தனியாக ஒவ்வொரு பாகமும் ஓர் அற்புதமான மெஷினாக இருப்பதோடு மட்டுமல்லாமல், எல்லாமாக ஒன்றுக்கொன்று இசைவாக சகாயம் செய்து போஷித்துக் கொள்வதும் மகா அதிசயமாக இருக்கிறது. ஆனபடியால், எவனோ லட்சத்தில் ஒருவன் தேகம் பொய், மனஸ் பொய் என்று ஞானியாக ஆகிறவன் ஆனாலும், பாக்கி எல்லாரும் பகவான் தந்திருக்கிற இந்த அற்புதமான மெஷினை வைத்துக் கொண்டு தர்மமாக வாழத்தான் முயற்சி பண்ண வேண்டியவர்களாக இருக்கிறோம்.

யோசித்துப் பார்த்தால், சரீரத்தை ஏன் மட்டம் என்று திட்ட வேண்டும்? அது என்ன கெடுதல் பண்ணுகிறது ? அது மனஸின் கருவி மட்டும்தானே ? கையையும் காலையும் கண்ணையும் வாயையும் மனஸ் நல்லபடி ஏவினால் சரீரம் நல்லதே செய்யும். கை பரோபகாரம் பண்ணும்; அல்லது அர்ச்சனை பண்ணும். கால் கோவிலுக்குப் போகும். கண் ஸ்வாமி தரிசனம் பண்ணும். வாய் ஸ்தோத்திரம் சொல்லும், அல்லது எல்லோருக்கும் பிரிய வசனம் சொல்லும். ஆனதால் 'நிஷித்தம்' என்று சரீரத்தைத் திட்டுவது கூடத் தப்புத்தான். ''தர்மத்தைச் செய்ய சரீரம்தானே ஸாதனமாயிருக்கிறது ?'' — சரீரம் ஆத்யம் கலு தர்ம ஸாதனம் — என்று வசனமே இருக்கிறது. ''தேஹோ தேவாலய: ப்ரோக்தோ'' — உள்ளே இருக்கிற பரமாத்மாவுக்கு இந்த உடம்பே ஓர் ஆலயம் — என்கிறோம். 'காயமே கோயிலாக' என்று அப்பரும் சொன்னார். திருமூலரும் இப்படியே, ''முன்னே உடம்பு ரொம்ப நிஷித்தம் என்று மட்டமாக நினைத்தேன். அப்புறம் அதற்குள்தான் ஈசுவரன் குடிகொண்டிருக்

[1932ம் வருஷத்திலிருந்து பெரியவர்கள் வழங்கிய உரைகள், ஸ்ரீமுகங்கள், கட்டுரைகளிலிருந்து தொகுத்தது]

கிறான் என்று தெரிந்து கொண்டதுமே. உடம்பை ஓம்பலானேன்'' என்று திருமந்திரத்தில் சொல்கிறார்.

ஆனதால் இப்படிப்பட்ட அற்புதமான, பகவான் கொடுத்த, மெஷினைவிட்டு உயிர் போனதும் அதைக் கன்னாபின்னா என்று 'டிஸ்போஸ்' பண்ணக் கூடாதுதான். மஹா சிமசானவாஸியான பரமேச்வரனுக்குத்தான் அதை ஆஹுதி பண்ண வேண்டும். எவன் இந்த உடம்பைக் கொடுத்தானோ அவனுக்கே தான் அதைத் திருப்பிக் கொடுக்க வேண்டும். உலகத்தில் உள்ள காட்டுக் குடிகள் உள்பட எல்லோரும் ஏதோ ஒரு தினுசில் இதைத் தெரிந்து கொண்டிருப்பதால்தான் எங்கே பார்த்தாலும் பிரேத சம்ஸ்காரம் என்பது ஒரு பெரிய சமயச் சடங்காக இருக்கிறது.

இதிலே ஒரு வித்தியாசம். மற்ற இஷ்டிகளை ஒரு ஜீவன், தானே பண்ணுகிறான். ஆனால் செத்துப் போன பிறகு உடம்பை பகவானுக்குக் கொடுக்கிற இந்த 'இஷ்டி'யை அவன் பண்ண முடியாது. மற்ற சம்ஸ்காரங்களைப் பண்ணுவதும், பண்ணாததும், இதனால் புண்ணிய பாபங்களைச் சம்பாதிப்பதும் அந்த ஜீவனுடைய காரியந்தான். இவற்றில் மற்றவர்களுக்குப் பொறுப்பு இல்லை. ஆனால் பிரேத சம்ஸ்காரம் மற்றவர்களே செய்ய வேண்டியது அல்லவா? அதனால் அதில் பொறுப்பு மற்றவர்களுக்குத்தான். எனவே, இதைச் சரியாகச் செய்யாவிட்டால் நமக்குத் தான் பாபம்.

'உயிரோடு இருக்கிற வரையில் உபகாரம் பண்ண வேண்டியதுதான்; போன உயிரும் வேறு எங்கோ இருக்குமாதலால் அதற்கு சிராத்தாதிகள் பண்ண வேண்டியதுதான்; ஆனால் உயிர் போன உடலுக்கு எதற்கு சம்ஸ்காரம்?' என்று முதலில் கேட்டுக் கொண்டோம். இப்போது அலசி அலசிப் பார்த்துக் கொண்டதிலோ, இந்த உடம்புக்குச் செய்கிற சம்ஸ்காரம்தான் முழுக்க நம் பொறுப்பில் இருப்பது; அதனால் இதைச் செய்யாவிட்டாலே நமக்குப் பெரிய தோஷம் என்று தெரிகிறது.

(தொடரும்)

## ராஜ தந்திரம்



'சங்கம்' படம் வெளியானவுடன் ராஜ்கபூரின் சிறிய மகனும் முகேஷின் சிறிய மகனும் சண்டை போட்டுக் கொண்டார்கள்.

''என் அப்பாதான் பாடினார்'' என்றான் ராஜ்கபூர் மகன்.

''இல்லை, இல்லை. என் அப்பாதான்'' என்றான் முகேஷ் மகன்.

இருவரும் ஒரு முடிவுக்கு வராமல் முகேஷின் மனைவியிடம் போய்க் கேட்டார்கள்.

முகேஷின் மனைவி தன் மகனிடம் சாமர்த்தியமாகச் சொன்ன பதில்:

''ரிகார்டிங் அறையில் உன் அப்பா பாடினார். திரையில் இவன் அப்பா பாடினார்!''

-இல்லஸ்ட்ரேட்டட் வீக்லி - பாலி

---

## லண்டன் கப்ஸா

சென்னைக்கு அருகில் பீட்டர் ராமசான் என்பவர் ஒரு குரங்கைக் கொண்டு வந்து வைத்துக்கொண்டு அது ஒரு மனிதக் குழந்தை என்றும் குரங்குகளால் வளர்க்கப்பட்டது என்றும் பொய் சொல்லி அந்தக் குழந்தையைப் பார்க்க வருபவர்களிடம் பணம் வசூலித்தாராம். பிறகு போலீசுக்கு இது தெரிந்து போய் அவரைக் கைது செய்தார்களாம்.

சென்னைக்கு அருகில் இப்படி ஒரு நிகழ்ச்சி நடந்ததாக ஒரு துணுக்குச் செய்தி லண்டனிலிருந்து வெளியாகும் ஒரு 'டிட்பிட்ஸ்' இதழில் வெளியாகியிருக்கிறது.

இது உண்மையாக இருக்குமா?

-கே.ஆர்.



---

ஓர் இசை மேதை தன் இசைத் திறமையால் காட்டு மிருகங்களைக்கூட மயக்க முடியும் என்று நினைத்தார்.

தம்முடைய வயலினை எடுத்துக் கொண்டு காட்டுக்குப் போனார். நடுக் காட்டில் மிருகங்கள் நடமாடும் இடத்தில் உட்கார்ந்து கொண்டு வயலினை வாசிக்க ஆரம்பித்தார்.

முதலில் ஒரு மானை பிளிறிக்கொண்டு ஓடி வந்தது. ஆனால் அருகில் வந்ததும் அவருடைய இசையைக் கேட்டு மயங்கி அவரைத் தாக்காமல் அருகிலேயே நின்று விட்டது.

அடுத்து அதே போல் ஒரு சிங்கம் பாய்ந்து வந்தது. அதுவும் அருகில் வந்து இசையைக் கேட்டு மயங்கி நின்று விட்டது. இப்படியே கொஞ்ச நேரத்தில் இந்த இசைமேதையைச் சுற்றிக் கொடிய காட்டு மிருகங்கள் இசையில் கட்டுப்பட்டு நின்று கொண்டிருந்தன.

கொஞ்ச நேரத்தில் ஒரு புலி ஓடிவந்து அவர்மீது பாய்ந்து அவரை அடித்துக் கொன்று தின்று விட்டது.

அதிர்ச்சியடைந்த மற்ற மிருகங்கள் அந்தப் புலியைப் பார்த்து ''என் அப்படிச் செய்தாய்? அந்த மனிதர் எவ்வளவு அழகாக இசைத்துக் கொண்டிருந்தார்!'' என்று கேட்டன.

அந்தப் புலி ஒரு ஹியரிங்-எய்டை எடுத்துக் காதில் மாட்டிக் கொண்டு, ''என்ன சொன்னீர்கள்? இப்போது சொல்லுங்கள்!'' என்று கேட்டது.

இங்கிலிஷ் டைஜஸ்ட் - பாலி


இனிமேல் கண்ணாடிகளை உடைக்காம யாருக்கும் அடிபடாம பார்த்து விளையாடணும்!
அதிகாரிகள்
நெருக்கடி நிலைப்பிரகடன அதிகாரங்களை துஷ்பிரயோகம் செய்யாதிருக்குமாறு மத்திய அரசு கேட்டுக் கொண்டுள்ளது!


ஷேக்
ஷேக் அப்துல்லாவின் மந்திரி சபையில் காங்கிரஸ் சேருகிறது!


கட்சியிலிருந்து நீக்கல்
இதுங்களெல்லாம் போகுதும் நம்ம வாத்தியார் அய்க்கு கொறைஞ்சுடாது! அவுரு வழக்கம் போல 'படா ஜோரா' இருப்பாரு!
அனைத்திந்திய அ.தி.மு.க.வில் களை எடுப்பு நடக்கிறதாம்!



திரு துமிலன்




## சுக பவனம்

எழுபத்தைந்து வயதான ஓர் ஆசாமியை அவரது ஐம்பது வருஷப் பத்திரிகை அனுபவத்தை மதித்து ஒரு பத்திரிகையின் ஆசிரியராகப் பொறுப்பேற்றுக் கொள்ளுங்கள் என்று கோரியிருக்கிறார்கள். அவரும் ஒப்புக் கொண்டிருக்கிறார்! ஆச்சரியமாயிருக்கிறதல்லவா? யார் அந்த மனிதர் என்று அறிந்தால் வியப்படையமாட்டீர்கள். 'ஓ! துமிலனா! அவரைப் பயன்படுத்திக் கொள்ள நினைத்ததில் என்ன அதிசயம்?' என்றுதான் எண்ணத் தோன்றும். பத்திரிகை உலக ஜாம்பவான் துமிலன், கோவையிலிருந்து வெளியாகும் ரஞ்சனி என்ற பத்திரிகையின் ஆசிரியர் பொறுப்பேற்று இருக்கிறார். நகைச்சுவை துமிலனின் கோட்டை. அதிலிருந்து கொண்டு அவர் விடும் ஹாஸ்ய பாணங்கள் நம்மை வயிற்றைப் பிடித்துக் கொண்டு கீழே சாய வைத்துவிடும். ஹாஸ்யத்துக்கு சுக பவனம் என்ற இந்த நாவலின் ஆரம்ப வரிகளையே எடுத்துக் கொள்ளுங்களேன்:

''உடம்பை என்னமோ பண்ணவிங்கியே! தலை கால் ஒண்ணையும் வலிக்கமாட்டேங்கு என்கிறதே, நான் என்ன செய்வேன்?'' என்று காந்தாமணி மலைப்பும் கவலையுமாய்க் கூறினாள்!

மன வியாதிகளால் அவதிப்படும் பலருக்குத் தம் சமயோசிதப் பேச்சுக்களினால் 'விடிவு' காண 'சுகபவனம்' தொடங்கினார் டாக்டர் லிங்கம்! ஆனால் இந்தச் சுக பவனத்தில் வந்து சேர்ந்த மிஸ் காந்தாமணி, ரமணன், சுகுமாரி, யோகியார் ஆகியோர் பல மனச் சிகிச்சைகளுக்கு மட்டும் உட்படவில்லை; பல மனப் போராட்டச் சிக்கல்களில் மாட்டிக் கொண்டு அவதிப்படுகின்றனர். நர்ஸ் பூமா பல சிக்கல்களுக்கு நடுவே இழையோடும் நூலாகப் பவனி வருகிறாள்!

சுக பவனத்தில் ஏற்படும் ஒரு நாள் கூத்து, கலவரத்தின் பயன் இரு கல்யாணங்கள்! சுகுமாரி ரமணனை மணக்கிறாள்! டாக்டர் லிங்கம் காந்தாமணியைக் கல்யாணம் செய்து கொள்கிறார்!

துமிலனுக்கு 'ஸடயர்' ரொம்பவும் கை வந்த கலை. அவர் நகாசு நடையில் கதாபாத்திரங்களை அறிமுகப்படுத்திக் கதையைக் கொண்டு செல்லும் முறையே அலாதி.

வேறு யாராவது மன நோய் மருத்துவமனை பற்றி இருநூறு பக்கங்கள் எழுதி அதை நாம் படிக்கவும் நேர்ந்தால் நமக்கே பைத்தியம் பிடித்துவிடும். ஆனால் துமிலனின் நாவலை இலேசாக மனத்துக்குள் சிரித்தபடியே கிடுகிடுவென்று படித்து முடித்து விடுகிறோம்!

—பி.எஸ்.எம்.

பிரசுரம்: அறிவு நிலையம், 118/1, பைகிராப்ட்ஸ் சாலை, திருவல்லிக்கேணி, சென்னை—600005. விலை ரூ. 6.

## ஒளிச் சேர்க்கை

சில புத்தகங்கள் பார்க்கப் பிரமாதமாயிருக்கும். விஷயம் ஒன்றுமிராது. வேறு சில புத்தகங்கள் படிக்கச் சுவாரசியமாயிருக்கும்; பார்க்க நன்றாயிராது. ஒளிச் சேர்க்கையில் இரண்டு அம்சங்களும் சேர்ந்துள்ளன. கையில் எடுக்கும்போதே சுகமாய் இருக்கிறது.

புதுக் கவிதை புஷ்டியாக இருக்கும்படி பார்த்துக் கொள்ள வேண்டும். யாப்பு தேவையில்லையென்றதனால் வெறும் வார்த்தைகளை அடுக்கி, 'இதோ புதுக் கவிதை' என்று கூறக் கூடாது.

இந்தத் தொகுப்பில் உள்ள புதுக் கவிதைகள் பல பொருள் பற்றியவை; சுவையானவை; புஷ்டியானவையும்கூட.

மாதிரிக்கு ஒரு தனிக் கவிதை. ''பேதை'' என்பது அதன் தலைப்பு; அழகான புதுக் கவிதை.

'' முன்புறம் முகிழ்த்த இளமலர் இரண்டைக்
கண்கரம் விரித்துப் பறிப்பதை விலக்கப்
பின்புறம் அசையும் பின்னல் ஒன்றை
முன்புறம் கிடத்தினாள் சாட்டை என்று.''




ஒளிச் சேர்க்கை மேலட்டை

''நாட்டியக் கலை'' என்ற கவிதைத் தொகுப்பில், அங்கதம் இருக்கிறது; நையாண்டி இருக்கிறது; கைகொட்டிச் சிரிக்க வைக்கும் கருத்தும் இருக்கிறது. —ஸோமாஸ்

எழுதியவர்: சி. மணி; பிரசுரம்: இருமால் அச்சகம், அம்மாப் பேட்டை, சேலம்–3; விலை: குறிப்பிடப்படவில்லை.

## ஒரு தலைமுறையின் பதினொன்று சிறுகதைகள்

தலைமுறைக்குத் தலைமுறை மாறுபாடு. பழையன கழிதலும் புதியன புகுதலும் இடம் மாறுவதுகூட உண்டு. அப்பொழுது பழையன புதியதாகத் தோற்றுவதுண்டு. புதியன பழையனவாகிப் போய்விடுவது உண்டு.

ஆனால் சொல்லும் முறையிலே ஒரு புதுமை! நோக்கும் வகையிலே ஒரு நுண்மை!

இந்தத் தலைமுறையின் கதை.

இந்தப் பதினொரு கதைகளுக்குள்ளே ஒரு தலைமுறையின் தரிசனங்கள், வெளிப்பாடுகள், கோபங்கள், புழுக்கங்கள், முறுவல்கள், முணுமுணுப்புகள், தன்னுணர்வுகள் எல்லாமே இருக்கின்றன.

இவற்றின் பாத்திரங்களான இளைஞர்கள் வெளியிலும் இருக்கிறார்கள்.

வண்ணதாசனின் **நடப்பு** தெருவின் அவல நிலையை அற்புதமாகப் படம் பிடித்துக் காட்டுகிறது. அதே நேரத்தில் அழகான வர்ணனையையும் வழங்குகிறது. 'வெயில் நன்றாகப் பழுத்து, நிழல்கள்கூட உதிர்ந்து அழுக ஆரம்பித்து விட்டன!' வண்ணக் கற்பனைக்கு இது ஒரு சான்றல்லவோ?

'இந்துமதி'யின் 'ஒரு கடிகாரத்தைச் சுற்றும் முட்கள்' மட்டும் கனமாயில்லை.

'விளிம்பு!'

நடப்பை நடப்பது போலவே காட்டுகிறார் பாலகுமாரன்.

முதலாளியும் இல்லாத, தொழிலாளியும் இல்லாதவனின் நிலையை விண்டு வைக்கிறது. ''என்னை முதலாளியின் ஆளாக நினைக்கிற தொழிலாளி இது நிர்வாகக் குறை என்று கூச்சலிடுகிறான். நிர்வாகமோ என்னைத் தொழிலாளிகளில் ஒருவனாகக் கருதுகிறது.... இவ்விரண்டு குழுவின் வக்கரிப்பினால் என் பொறுப்பு அதிகமாகி விட்டதை உணர்கிறேன்.''



ஒரு தலைமுறையின் பதினொரு சிறுகதைகள் நூலின் மேலட்டைப்படம்

பதமாகாத கதை கலாஸ்ரீயின் கோட்டு; ரொம்பப் பழைய கோட்டு!

நாறுக்குத் தெறித்தாற் போன்ற வர்ணனைகளை, ஆங்காங்கே விண்மீனெனக் கண் சிமிட்டும் கற்பனைகளை இரசித்து நுகர வேண்டுமானால்,

'வாசகன்' அளிக்கும் கதைத் தொகுதியினை முழுதும் படித்து முடித்திட வேண்டும்.

'வாசகன்' அளிக்கும் இந்நூலைப் பெற, சென்னை இளைஞர் சங்கம், 173, வாயிட்ஸ் சாலை, சென்னை—600014 என்ற விலாசத்தை ஆறு ரூபாயோடு அணுக வேண்டும். —ரா.வீ.



# கேர்ஃப்ரீ* பாதுகாப்பு




## அதாவது இது முழுமையான பாதுகாப்பு அளிக்கிறது. இதற்காக நீங்கள் கொடுக்கும் பணத்தைவிட மிக அதிக மதிப்பு வாய்ந்தது.

மாதத்தில் அந்த ஐந்து நாட்கள், பெண்களின் உடலுக்கு முழுவதும் சுகமான, தனிப்பட்ட பாதுகாப்பு தேவைப்படுகிறது; அதாவது கேர்ஃப்ரீ பாதுகாப்பு. சானிடரி பாதுகாப்பு சாதனங்களை உருவாக்கும் உலகின் தலையாய நிறுவனமான ஜான்ஸன் அண்ட் ஜான்ஸன் இதைத் தயாரிக்கிறார்கள். ஒரு பெண்மணி பாதுகாப்பையும் சாப்புறுதியையும் உணருவதற்குத் தேவையான சிறந்த அம்சங்களைக் கொண்டுள்ளது கேர்ஃப்ரீ.

**விசேஷ ஒண்டர்ராப் மேலுறை**
கேர்ஃப்ரீ தன் வடிவத்தை சீராகவைக்க உதவுகிறது...சாதாரண நேப்கின்களைப் போல் இது வளையவோ, நீளவோ செய்யாது. இது உட்புற அடுக்குகளில் ஈரத்தை உறிஞ்சிக் கொள்கிறது. எனவே உங்கள் சருமம் உலர்ந்து இருக்கும், உங்களுக்கு சௌகரியமாக இருக்கும்.

**நீலநிற பிளாஸ்டி-ஷீல்ட் தடுப்பு**
கேர்ஃப்ரீயின் அடிப்பாகம் மற்றும் பக்கங்களைப் பராமரிக்கிறது பாதுகாப்பான பாலித்தீன். ஆகையால், அது இடம் விட்டு நகரும் வாய்ப்பில்லை; கறை படியும் பயம் இல்லை.

**அதிக உறிஞ்சும் தன்மையுள்ள விசேஷ பொருள்**
மிக நன்றாக உறிஞ்சுகிறது; உறுதியுடன் பாதுகாப்பளிக்கிறது.

**கச்சிதமாகப் பொருந்த முனைப்பாகம்**
கேர்ஃப்ரீ மட்டுமே விரும்பியபடி சரிசெய்து கொள்ளும் நீளத்தில் வருவதால், அது உங்களுடைய உடலில் கச்சிதமாகப் பொருந்துகிறது. ஒவ்வொரு பேக்கிலும், இலவச கேர்ஃப்ரீ பெல்ட் ஒன்று வைக்கப்பட்டுள்ளது.

**எளிதில் ஒதுக்கிவிடலாம்**
கேர்ஃப்ரீ ஒரு ஆபத்தற்ற, எளிதில் ஒதுக்கித் தள்ளக்கூடிய நேப்கின்; இதை பிளஷ்ஷில் தள்ளிவிடலாம்...வெளியில் செல்லும் போதோ, பயணத்தின்போதோ இது ஒரு வரப்பிரசாதம்—
கேர்ஃப்ரீ பாதுகாப்புமுழுமையான பாதுகாப்பினை விரும்பும் பெண்மணிக்கு இது மிகவும் முக்கியமானது.
கேர்ஃப்ரீ: உங்களுக்கு முழுமையான உறுதி தரும் பாதுகாப்பு.






## கேர்ஃப்ரீ:
## உங்களுக்கு முழுமையான உறுதி தரும் பாதுகாப்பு.

*சானிடரி நேப்கின்களின் வர்த்தகப் பெயர், கேர்ஃப்ரீ மற்றும் ஜான்ஸன் அண்ட் ஜான்ஸன், ஜான்ஸன் அண்ட் ஜான்ஸன், யு. எஸ்.ஏ-யின் டிரேட்மார்க்குகள்.

Johnson & Johnson*

# பார்த்திபன் கனவு

## அமரர் கல்கி

### அத்தியாயம் 9

## தந்தையும் மகளும்

குந்தவி தாயில்லாப் பெண். அவளுடைய அன்னையும் பாண்டிய ராஜகுமாரியும் நரசிம்மவர்மரின் பட்டமகிஷியுமான வானமாதேவி, குந்தவி ஏழு வயதுக் குழந்தையாயிருந்தபோதே சுவர்க்கம் அடைந்தாள்.

இந்தத் துக்கத்தை அவள் அதிகமாக அறியாதவண்ணம் சில காலம் சிவகாமி அம்மை அவளைச் செல்வமாய் வளர்த்து வந்தாள். இந்தச் சிவகாமி தேவி பிரசித்தி பெற்ற ஆயனச் சிற்பியின் மகள். நரசிம்மவர்மரால் வாதாபியிலிருந்து சிறை மீட்டு வரப்பட்டவள். பட்டமகிஷியின் மரணத்துக்குப் பிறகு நரசிம்மவர்மர் சிவகாமியை மணம் புரிந்து கொள்வார் என்று சில காலம் பேச்சாயிருந்தது. ஆனால் அவ்விதம் ஒன்றும் நடக்கவில்லை. சில வருஷ காலத்துக்கெல்லாம் சிவகாமி தேவியும் சுவர்க்கம் புகுந்து விட்டாள்.

பிறகு, சக்கரவர்த்தியே குந்தவிக்குத் தாயும் தகப்பனுமாயிருந்து அவளை வளர்க்க வேண்டியதாயிற்று. அந்தப்புரத்தில் குந்தவியின் பாட்டிமார்கள். மகேந்திரவர்மருடைய பத்தினிகள் — சிலர் இருந்தனர். ஆனால் அவர்களுக்கும் குந்தவிக்கும் அவ்வளவாக மனப்பொருத்தம் ஏற்படவில்லை. குந்தவியின் தாயாரைக் குறித்து, ''தெற்கத்தியாள்'' என்று அவர்கள் குறை கூறியதையும், சிவகாமிதேவியைப் பல விதமாக நிந்தை செய்ததையும் குந்தவி குழந்தைப் பருவத்தில் கேட்டிருந்தாள். இதனாலேயே பாட்டிமார்களிடத்தில் அவளுக்குப் பற்றுதல் உண்டாகவில்லை. குந்தவியின் நடை உடை பாவனைகளும் அவள் யதேச்சையாகச் செய்த காரியங்களும் அந்தப் பாட்டிமார்களுக்குப் பிடிக்கவில்லை. நரசிம்மவர்மர் இந்தப் பெண்ணுக்கு ரொம்பவும் இடங் கொடுத்துக் கெடுத்துவிடுகிறார் என்ற குறையும் அவர்களுக்கு உண்டு.

இக்காரணங்களினால் குந்தவிக்குத் தன் தந்தையிடம் உள்ள இயற்கையான பாசம் பன்மடங்கு வளர்ந்திருந்தது. அப்பாவுடன் இருக்கும்போதுதான் அவளுக்குக் குதூகலம்; அவருடன் வார்த்தையாடுவதில்தான் அவளுக்கு உற்சாகம்; அவருடன் சண்டை பிடிப்பதில்தான் அவளுக்கு ஆனந்தம். அவர் தன்னை உடன் அழைத்துப் போகாமல் ராஜரீகக் காரியங்களுக்காக வெளியூர்களுக்குப் போயிருந்தால், அவளுக்கு ஒரு நாள் போவது ஒரு யுகம் போவது போலிருக்கும்.

சக்கரவர்த்திக்கோ என்றால், — ஏன்? —அவருடைய பிராணனே குந்தவியாக உருக் கொண்டு வெளியில் நடமாடுகிறது என்று கருதும்படி இருந்தது. அவருடைய விசால இருதயமானது ஒரானொரு காரணத்தில் பல ஆண்டுக் காலம் வறண்டு பசையற்றுப் பாலைவனமாயிருந்தது. அப்படிப்பட்ட இருதயத்தில் குந்தவியின் காரணமாக மீண்டும் அன்பு தளிர்த்து ஆனந்தம் பொங்கத் தொடங்கியது. குந்தவியின் ஒவ்வொரு சொல்லும், செயலும், நோக்கும், சமிக்ஞையும் சக்கரவர்த்திக்குப் புளகாங்கிதம் உண்டாக்கின.

* * *

தந்தையின் வரவை எதிர்நோக்கிக் குந்தவி தேவி அரண்மனை உப்பரிகையின் நிலா மாடத்தில் உட்கார்ந்திருந்தாள். பௌர்ணமிக்குப் பிறகு மூன்று நாட்கள் ஆகியிருக்கலாம். கிழக்கு அடிவானத்தில் வரிசையாகத் தோற்றமளித்த பனை மரங்களுக்கு நடுவில், சிறிது குறைந்த சந்திரன், இரத்தச் சிவப்பு ஒளியுடன் உதயமாகிக் கொண்டிருந்தான். மற்ற நாட்களாயிருந்தால் குந்தவி தேவி இந்த அழகிய வானக் காட்சியின் வனப்பில் ஈடுபட்டு மெய்ம்மறந்திருப்பாள். ஆனால், இன்று இரவு அவளுக்கு எதிலுமே மனம் செல்லவில்லை. வீதியில் குதிரை மீது வைத்துச் சங்கிலியால் பிணைத்துக் கொண்டு போன இராஜ

குமாரனுடைய ஞாபகமாகவே அவள் இருந்தாள். அவனைப் பற்றி விசாரிப்பதற்காகவே தந்தையின் வருகையை வழக்கத்தைவிட அதிக ஆர்வத்துடன் எதிர்பார்த்துக் கொண்டிருந்தாள்.

கடைசியாக, நரசிம்மவர்மரும் வந்து சேர்ந்தார். குந்தவி அவரை ஓடி வரவேற்று, அவருடைய விசாலமான இரும்புத் தோள்களைத் தன் இளங்கரங்களினால் கட்டிக் கொண்டு தொங்கினாள். ''ஏன் அப்பா! இன்றைக்கு இத்தனை நேரம்?'' என்று கேட்டாள். என்றுமில்லாத அவளுடைய பரபரப்பையும் ஆர்வத்தையும் பார்த்து நரசிம்மவர்மர் ஆச்சரியப்பட்டுப் போனார். ''அப்படியொன்றும் நேரமாகிவிடவில்லை, அம்மா! தினம் போலத்தானே வந்திருக்கிறேன். ஏதாவது விசேஷம் உண்டா?'' என்று கேட்டார்.



குந்தவி ஏதோ சொல்ல ஆரம்பித்தவள் சட்டென்று நிறுத்திக்கொண்டாள். ''ஒரு விசேஷம் இருக்கிறது, அப்பா! ஆனால் இப்போது சொல்ல



மாட்டேன். நீங்கள் முதலில் சொல்லுங்கள். சபையில் ஏதாவது விசேஷம் உண்டா ?'' என்று கேட்டாள்.

''ஆமாம்; உண்டு. இலங்கையிலிருந்து இன்றைக்குச் செய்தி வந்தது. அங்கே நடந்த பெரும் போரில் நமது சைன்யங்கள் மகத்தான வெற்றியடைந்தனவாம். 'இலங்கை மன்னன் சமாதானத்தைக் கோருகிறான்; என்ன செய்யட்டும்?' என்று உன் தமையன் ஓலை அனுப்பியிருக்கிறான்.''

''ரொம்ப சந்தோஷம், அப்பா! அப்படியானால் அண்ணா சீக்கிரம் திரும்பி வந்துவிடுவானோ, இல்லையோ?''

''கொஞ்ச காலம் கழித்துத்தான் வருவான். மதுரையில் உன் மாமாவுக்குக் கொஞ்ச நாட்களாகத் தேக அசௌகரியமாயிருக்கிறதாம்; அங்கே போய்க் கொஞ்ச காலம் இருந்துவிட்டு வரச் சொல்லியிருக்கிறேன். நீயும் வேணுமானால் மதுரைக்குப் போய் வருகிறாயா? குழந்தாய்! உன் மாமா உன்னைப் பார்க்க வேணுமென்று எவ்வளவோ ஆசைப்படுகிறாராம்.''

''அதெல்லாம் முடியாது. நான் உங்களை விட்டுப் போக மாட்டேன். இருக்கட்டும்; இன்னும் ஏதாவது விசேஷம் உண்டா, அப்பா!''

''உண்டு; சோழ நாட்டில்...''

''சோழ நாட்டில்'' என்றதும் குந்தவியின் உடம்பில் படபடப்பு உண்டாயிற்று. இதைப் பார்த்த சக்கரவர்த்தி மிகவும் வியப்படைந்தவராய், ''என்ன குந்தவி! உனக்கு என்ன உடம்பு?'' என்று கேட்டார்.



**தேடாமல் வந்த ஜோக்-1**

(ஞாபக மறதியில்) ''நான் இப்பல்லாம் நிறைய ஹிந்தி பிலிம் பார்க்க ஆரம்பிச்சுட்டேன்! நேத்திக்குக் கூட ஒரு படம் பார்த்தேன். அதில் ஹேமேந்திரா-தர்மமாலினி நடிப்பு ரொம்பப் பிரமாதமாக இருந்தது!''

---

''ஒன்றுமில்லை, அப்பா! சோழ நாட்டில் என்ன விசேஷம்? சொல்லுங்கள்'' என்றாள் குந்தவி.

''சோழ நாட்டில் காழி என்னும் ஊரில் ஓர் இளம் பிள்ளை தெய்வ சாந்நித்யம் பெற்று மகாஞானியாய் விளங்குகிறாராம். சிவபெருமான் பேரில் தீந்தமிழ்ப் பாடல்களைத் தேனிசையாய்ப் பொழிகிறாராம். தீராத வியாதிகள் எல்லாம் அவர் கையினால் திருநீறு வாங்கி இட்டுக் கொண்டால் தீர்ந்து விடுகிறதாம். ஞானசம்பந்தர் என்று பெயராம்!''

''நன்றாயிருந்தது, போங்கள். யமனுக்கு அப்படி ஒரு விரோதி கிளம்பியிருக்கிறாரா? அந்தப் பிள்ளை திருநீறு கொடுத்து வியாதிகள் எல்லாவற்றையும் தீர்த்துக் கொண்டு போனால், யமலோகம் அல்லவா சூனியமாய்ப் போய் விடும்? நீங்களுந்தான் இப்போதெல்லாம் யுத்தம் செய்வதையே நிறுத்தி விட்டீர்கள்!'' என்றாள் குந்தவி.

''எல்லாம் உன்னாலேதான்! நீ என் கழுத்தைக் கட்டிக் கொண்டு விட மாட்டேனென்றால், நான் யுத்தத்துக்குப் போவது எப்படி? உன்னை வேறு ஒருவன் கழுத்தில் கட்டிவிட்டால், அப்புறம்....''

''அப்புறம் அவன் பாடு அதோகதிதான்! அது கிடக்கட்டும், அப்பா! இன்றைக்கு வேறு விசேஷம் ஒன்றுமில்லையா?'' என்றாள் குந்தவி.

''ஆமாம்; இன்னும் ஒரே ஒரு விசேஷம் இருக்கிறது. கடல் மல்லைக்கு நாம் போயிருந்தபோது உறையூரிலிருந்து ஒரு தூதன் வந்தானே, ஞாபகம் இருக்கிறதா? நீகூட விஷயத்தைக் கேட்டுவிட்டு, 'அந்தச் சோழ ராஜகுமாரனை நன்றாய்த் தண்டிக்க வேண்டும்' என்று சொன்னாயே? அவனைச் சிறைப் பிடித்து இன்றைக்கே இங்கே கொண்டு வந்து சேர்த்தார்கள்....''

''அப்பா! அவனைச் சங்கிலிகளால் கட்டிக் குதிரை மேல் வைத்துக்கொண்டு வந்தார்களா?'' என்று குந்தவி கேட்டாள்.

''ஆமாம்! உனக்கு எப்படித் தெரிந்தது?'' என்றார் சக்கரவர்த்தி.

''மத்தியானம் நான் கோயிலுக்குப் போய்க் கொண்டிருந்தபோது வீதியில் பார்த்தேன்.''

குந்தவியிடம் வழக்கமில்லாத படபடப்பு அன்று ஏற்பட்டிருந்ததின் காரணத்தை நரசிம்மவர்மர் அப்போது அறிந்து கொண்டார்.

''ஒருவேளை அவனாய்த்தான் இருக்கும். அது போகட்டும், குழந்தாய்! நமது அப்பர் பெருமானின் பதிகம் ஒன்றைப் பாடு, பார்க்கலாம்'' என்றார் சக்கரவர்த்தி.

''அப்பா! அந்த ராஜகுமாரனை இராத்திரி எங்கே வைத்திருப்பார்கள்?'' என்று குந்தவி கேட்டாள்.

''வேறு எங்கே வைத்திருப்பார்கள்? காராக்கிரகத்தில் வைத்திருப்பார்கள்!''

''ஐயையோ!''

''என்ன, குழந்தாய்? எதைக் கண்டு பயப்படுகிறாய்?'' என்று நரசிம்மவர்மர் தூக்கிவாரிப் போட்டாற் போல் எழுந்து நாலுபுறமும் பார்த்தார்.

குந்தவி அவரைக் கீழே அமர்த்தி, ''ஒன்றுமில்லை, அப்பா! காராக்கிரகத்திலிருந்து அந்த இராஜகுமாரன் தப்பித்துக் கொண்டு போய்விட்டால் என்ன செய்கிறது என்று பயந்தேன்!'' என்றாள்.

''இவ்வளவுதானே!'' என்று சக்கரவர்த்தி புன்னகை செய்து, ''அந்த மாதிரியெல்லாம் பயப்படாதே! பல்லவ ராஜ்யாதிகாரம் இன்னும் அவ்வளவு கேவலமாய்ப் போய்விடவில்லை. விக்கிரமன் தப்ப முயன்றானால், அந்த க்ஷணமே பல்லவ வீரர்களின் பன்னிரண்டு ஈட்டி முனைகள் அவன் மீது ஏககாலத்தில் பாய்ந்து விடும்!'' என்று சொன்னார்.

இந்தக் கடூரமான வார்த்தைகளைக் கேட்டு, குந்தவியின் உடம்பு இன்னும் அதிகமாகப் பதறிற்று.

''அப்பா! நான் ஒன்று சொல்லுகிறேன், கேட்கிறீர்களா?'' என்றாள் குந்தவி.

''நான் கேட்காவிட்டால் நீ என்னை விடத்தான் போகிறாயா?'' என்றார் சக்கரவர்த்தி.

''அந்த ராஜகுமாரனுடைய முகத்தைப் பார்த்தால் அப்படியொன்றும் பொல்லாதவனாகத் தோன்றவில்லை, அப்பா! யாரோ துஷ்ட மனிதர்கள் அவனுக்குத் துர்ப் போதனை செய்து

# நீடித்த அழகுக்கு உம்மிடியார்ஸ் நகைகளே. நிலையான மதிப்பீட்டிற்கும் உம்மிடியார்ஸ்தான்.



மனங்கவரும் டிசைன்கள்,
மாசுமருவற்ற வைரங்கள்,
வைரகற்கள் -
பதித்த ஆபரணங்கள்,
ஒளிவீசும் தங்க நகைகள்,
மற்றும் கலையழகு
மிளிரும் வெள்ளிப்
பாத்திரங்களைக் -
காணவருக !



**எங்களது "நவரத்ன" சேமிப்பு திட்டத்தில் சேர்ந்து பயனடையுங்கள்.**

தனிச்சிறப்பு பெற்ற நகைகளுக்கு ஒப்பற்ற ஸ்தாபனம்.



# உம்மிடியார்ஸ்

உம்மிடி ராமய்ய செட்டி, குருஸ்வாமி செட்டி அண்டு சன்ஸ்.
உம்மிடியார்ஸ் ஷாப்பிங் சென்டர்,
162, அண்ணாசாலை, சென்னை-600 002.
போன் : 89488—81607

ஞாயிறு விடுமுறை

VSK-V 205

இப்படி அவனை உங்களுக்கு விரோத மாய்க் கிளப்பிவிட்டிருக்க வேண்டும்.''

''நீ சொல்வது ரொம்ப வாஸ்தவம். நான்கூட அவ்வாறுதான் கேள்விப்பட்டேன். யாரோ ஒரு சிவனடியார் அடிக்கடி இந்த விக்கிரமனையும் அவனுடைய தா யாரையும் போய்ப் பார்த்துண்டாம். அந்த வேஷதாரிதான் விக்கிரமனை இப்படிக் கெடுத்திருக்க வேண்டும் என்று தகவல் கிடைத்திருக்கிறது.''

''பார்த்தீர்களா? நான் எண்ணியது சரியாய்ப் போயிற்றே! உறையூரில் என்னதான் நடந்ததாம்? பெரிய சண்டை நடந்ததோ? ரொம்பப் பேர் செத்துப் போனார்களோ?''

''பெரிய சண்டையுமில்லை; சின்னச் சண்டையும் இல்லை. இந்த அசட்டுப் பிள்ளை ஏமாந்து அகப்பட்டுக் கொண்டதுதான் லாபம். மாரப்ப பூபதி என்று இவனுக்கு ஒரு சித்தப்பன் இருக்கிறான். அவன் பெரிய படைகளைத் திரட்டிக் கொண்டு வருகிறேன் என்று இந்தப் பிள்ளையிடம் ஆசை காட்டியிருந்தான். அவன் அன்றைக்குக் கிட்டவே வரவில்லை. அதோடு, நமது தளபதி அச்சுத வர்மரிடம் சமாசாரத்தையும் தெரியப்படுத்தி விட்டான். அன்று பல்லவ வீரர்கள் ஆயத்தமா யிருந்தார்கள். வெளியூர்களிலிருந்து வந்த சில ஜனங்களை ஊருக்கு வெளியிலேயே வளைத்துக் கொண்டு விரட்டி விட்டார்கள். விக்கிரமனோடு கடைசியில் சேர்ந்தவர்கள் ஒரு கிழக் கொல்லனும், ஒரு படகோட்டியும், இன்னும் நாலைந்து பேருந்தான். கிழவன் அங்கேயே செத்து விழுந்துவிட்டான். மற்றவர்களையெல்லாம் சிறைப்படுத்தி, விக்கிரமனை மட்டும் என் கட்டளைப்படி இங்கே அனுப்பினார்கள்....''

''ஐயோ! பாவம்!'' என்றாள் குந்தவி.

''எதற்காகப் பரிதாபப்படுகிறாய், அம்மா! இராஜத் துரோகம் ஜயிக்கவில்லையே என்று பரிதாபப்படுகிறாயா?''

''இல்லை, இல்லை, இந்த இராஜகுமாரன் இப்படி ஏமாந்து போய்விட்டானே என்றுதான். ஆமாம், அப்பா! இந்த மாதிரி நடக்கப் போகிறதென்று உங்களுக்கு முன்னாலேயே தெரிந்திருந்ததே, அது எப்படி?''

''என்னிடம்தான் மந்திர சக்தி இருக்கிறது என்று உனக்குத் தெரியுமே!...ஆமாம்! அப்பர் பெருமானின் பதிகம் பாடப்போகிறாயா, இல்லையா?'' என்று மீண்டும் சக்கரவர்த்தி பேச்சை மாற்ற முயன்றார்.

## தேடாமல் வந்த ஜோக்-2



''என்ன சார் கையில் கட்டு?'' (குள்ளமாக உள்ளவர்) ''எனக்கும் என் பெண்சாதிக்கும் வீட்டில் ஒரே சண்டை. கோபத்தில் வீட்டில் இருந்த பக்கெட்டைத் தூக்கி வாசலில் விட்டு எறிஞ்சிட்டா....!''

''சரி! அதனால் உங்களுக்கு எப்படி அடிபட்டது?''

''அதுவா? நான் அந்தப் பக்கெட்டில்தான் குளிச்சுக்கிட்டிருந்தேன்!''

---

''அப்பா! எனக்கு ஒன்று தோன்றுகிறது. இந்தத் தடவை மட்டும் அந்த இராஜகுமாரனை நீங்கள் மன்னித்து விட்டால்....''

''என்ன சொன்னாய், குந்தவி! பெண் புத்தி என்பது கடைசியில் சரியாய்ப் போய்விட்டதே! அன்றைக்கு அவனைக் கடுமையாய்த் தண்டிக்க வேண்டும் என்றாயே! அதனால்தான் பெண்களுக்கு இராஜ்ய உரிமை கிடையாது என்று பெரியவர்கள் வைத்திருக்கிறார்கள்...''

''சுத்தப் பிசகு! பெண்களுக்கு இராஜ்ய உரிமை இருந்தால் உலகத்தில் சண்டையே இராது. அந்த இராஜகுமாரனை மட்டும் நான் சந்தித்துப் பேசினேனானால் அவனுடைய மனத்தை மாற்றி விடுவேன். முடியுமா, முடியாதா என்று பார்க்கலாமா, அப்பா!''

''முடியலாம் குழந்தாய், முடியலாம்! அவனுடைய மனத்தை மாற்றுவது உன்னால் முடியாத காரியம் என்று நான் சொல்லவில்லை. உனக்கு முன்னால் எத்தனையோ ஸ்திரீகள் புத்திசாலிகளை அசடுகளாக்கி யிருக்கிறார்கள்; வைராக்கிய சீலர்களைப் பைத்தியமாக்கியிருக்கிறார்கள்; வீரர்களைக் கோழைகளாக்கி யிருக்கிறார்கள். இதற்கு மாறாகச் சாதாரண மனுஷ்யர்களைப் புத்திசாலிகளாகவும் வைராக்கிய புருஷர்களாகவும், வீரர்களாகவும் செய்த ஸ்திரீகளும் இருந்திருக்கிறார்கள். பெண் குலத்துக்கு இந்தச் சக்தி உண்டு; உண்மைதான்; நீ நினைத்தாயானால், விக்கிரமனைச் சுதந்திரம் என்ற பேச்சையே மறந்துவிடும்படி செய்து விடலாம். ஆனால், உன்னுடைய சாமர்த்தியத்தை நீ கொஞ்சம் முன்னாலேயே காட்டியிருக்க வேண்டும். அவன் குற்றம் செய்வதற்குமுன் உன் பிரயத்தனத்தைச் செய்திருக்க வேண்டும். இனிமேல் பிரயோஜனம் இல்லை, அம்மா! குற்றவாளியைத் தண்டித்தேயாக வேண்டும். இன்று

தேடாமல் வந்த ஜோக்-3



"நாளையிலிருந்து பிச்சைக்காரர்களுக் கெல்லாம் கவலையே இல்லே. பேப்பர்லே போட்டிருக்கு!"

"என்ன அப்படிப் போட்டிருக்கான்!"

"இன்று சென்னையில் 'அடை மழை'."

விக்கிரமனைச் சும்மா விட்டுவிட்டால், நாளைக்கு ஒவ்வோர் ஊரிலும் ஒருவன் கலகம் செய்யக் கிளம்புவான்! அப்புறம் இராஜ்யம் போகிற வழி என்ன?''

இந்த வார்த்தைப் புயலில் அகப்பட்ட குந்தவி பதில் சொல்லத் தெரியாமல் திகைத்து நின்றாள். சற்று நேரம் பொறுத்து, "அப்பா! அவனுக்கு என்ன தண்டனை விதிப்பீர்கள்?'' என்று கேட்டாள்.

"இப்போது சொல்ல முடியாது, குந்தவி! நாளைக்குத் தர்மாசனத்தில் உட்கார்ந்து விசாரணை செய்யும்போது என்ன தண்டனை நியாயம் என்று தோன்றுகிறதோ, அதைத்தான் அளிப்பேன். நியாயத்திலிருந்து ஓர் அணுவளவேனும் தவறினார்கள் என்ற அவச்சொல் இதுவரையில் பல்லவ வம்சத்துக்கு ஏற்பட்டதில்லை; இனி மேலும் ஏற்படாது'' என்றார் சக்கரவர்த்தி.

## அத்தியாயம் 10

# துறைமுகத்தில்

அன்றிரவு குந்தவி சரியாகத் தூங்கவில்லை. சோழ ராஜகுமாரனுடைய சோகமும் கம்பீரமும் பொருந்திய முகம் அவள் மனக் கண்ணின் முன்னால் இடைவிடாமல் தோன்றி அவளுக்குத் தூக்கம் வராமல் செய்தது. நள்ளிரவுக்குப் பிறகு சற்றுக் கண்ணயர்ந்தபோது, என்ன வெல்லாமோ பயங்கரமான கனவுகள் தோன்றியதால், அவள் அடிக்கடி திடுக்கிட்டுக் கண் விழிக்க வேண்டியதாயிற்று.

சோழ ராஜகுமாரனைக் கழுத்து வரையில் பூமியில் புதைத்திருக்கிறது. அவனை நோக்கி ஒரு மத யானை அதி வேகமாக ஓடி வருகிறது. அடுத்த நிமிஷம், ஐயோ! யானையின் கால்கள்,—தூணையொத்த கால்கள், அந்தச் சுகுமாரனுடைய தலையை இடறி விடப்போகின்றன! குந்தவி பதை பதைப்புடன் ஓடி வந்து யானை வரும் வழியில் நிற்கிறாள். யானை தன் துதிக்கையினால் அவளை லாகவமாகத் தூக்கித் தன் முதுகின் மேல் வைத்துக் கொண்டு மேலும் ஓடுகிறது. குந்தவி பயங்கரத்துடன் எதிரே பூமியில் புதைந்து நிற்கும் இராஜ குமாரனுடைய முகத்தைப் பார்க்கிறாள்! அந்தச் சமயத்திலும் அந்த முகத்தில் அலட்சியமும் அவமதிப்பும் கலந்த புன்னகை குடிகொண்டிருப்பதைக் காண்கிறாள். "ஐயோ!'' என்று கதறிக் கொண்டு கண் விழிக்கிறாள். கண்டதெல்லாம் கனவென்று தெரிகிறது. ஆனாலும் அவள் உடம்பு வெகு நேரம் நடுங்கிக் கொண்டிருக்கிறது.

■ ■ ■

சற்று நேரத்துக்கெல்லாம் மறுபடியும் கண்ணயர்ந்து வருகிறது. அரைத் தூக்கத்தில் மீண்டும் பயங்கரமான கனவு. கழு மரங்கள் வரிசையாக நட்டிருக்கின்றன. சோழ ராஜகுமாரனைக் கழுவேற்றுவதற்காகக் கொண்டு வந்து நிறுத்தியிருக்கிறார்கள். குந்தவி அவ்விடத்துக்கு ஓடோடியும் வருகிறாள். துர்க்கை அம்மனை மனத்தில் தியானித்துக் கொண்டு அந்தக் கழு மரங்கள் எல்லாம் பற்றி எரிய வேண்டும் என்று பிரார்த்திக்கிறாள். அவையெல்லாம் தீப் பற்றி எரிகின்றன, குந்தவி அளவிலாத மகிழ்ச்சியுடன் இராஜகுமாரன் நின்ற இடத்தை நோக்குகிறாள். அந்தோ! அவனைச் சுற்றிலும் பன்னிரண்டு பல்லவ வீரர்கள் நின்று பன்னிரண்டு ஈட்டிகளை அவன் மீது செலுத்தச் சித்தமாயிருக்கிறார்கள். அடுத்த கணத்தில் ஈட்டிகள் அந்த அரசிளங்குமரனுடைய மிருதுவான தேகத்தில் பாயப் போகின்றன. குந்தவி, "ஐயோ!'' என்று கதறிக் கொண்டு, கீழே விழுகிறாள். கண் விழித்துப் பார்த்தால், மஞ்சத்திலிருந்து கீழே விழுந்திருப்பதாகத் தெரிகிறது!

■ ■ ■

இதன்பிறகு குந்தவி தூங்குவதற்குப் பிரயத்தனம் செய்யவில்லை. யானையின் காலில் வைத்து இடறுதல், கழுவேற்றுதல் முதலிய கொடூரமான தண்டனைகளெல்லாம் தன் தகப்பனாரின் தர்ம ராஜ்யத்தில் இல்லை என்பதை ஞாபகப் படுத்திக் கொண்டு தைரியம் அடைந்தாள்.

ஒருவாறு இரவு கழிந்து பொழுது விடிந்தது. சக்கரவர்த்தி சபைக்குப்

புறப்படும் நேரமும் வந்தது. அவரிடம் மறுபடியும் சோழ ராஜ குமாரனைப் பற்றிப் பேச வேண்டும் என்று குந்தவி துடிதுடித்தாள். ஆனால், சக்கரவர்த்தியைப் பரிவாரங்கள் சூழ்ந்திருந்தபடியால் அது சாத்தியமாயில்லை. அவர் விடைபெற்றுக் கொண்டு கொஞ்ச தூரம் சென்றுவிட்டார். ஏதாவது சொல்லா விட்டால் குந்தவிக்கு நெஞ்சு வெடித்து விடும் போல் இருந்தது. ''அப்பா ! நான் சொன்னது ஞாபகம் இருக்கட்டும் '' என்றாள். நரசிம்மவர்மர் அவளைத் திரும்பிப் பார்த்து, ''எதைச் சொல்கிறாய், குந்தவி ! ஓகோ ! சோழ ராஜகுமாரனைக் கடுமையாய்த் தண்டிக்க வேண்டும் என்று சொன்னாயே, அதுதானே ? ஞாபகம் இருக்கிறது !'' என்று சொல்லிவிட்டுப் பின்னர் திரும்பிப் பார்க்காமலே சென்று விட்டார்.

குந்தவிக்குச் சொல்ல முடியாத ஆத்திரமும் துக்கமும் பொங்கிக் கொண்டு வந்தன. விரைந்து பள்ளியறைக்குச் சென்று மஞ்சத்தில் குப்புறப் படுத்துக் கொண்டு கொஞ்ச நேரம் விம்மி விம்மி அழுது கொண்டிருந்தாள். தன்னாலே தான் சோழ ராஜகுமாரன் கடுந் தண்டனை அடையப் போகிறான் என்ற எண்ணம் அவள் மனத்தில் வேரூன்றிவிட்டது. இது அவனுக்குத் தெரியும்போது எவ்வளவு தூரம் தன்னை வெறுப்பான் என்ற எண்ணம் அவளைப் பெரு வேதனைக்கு உள்ளாக்கியது.

தான் ஏதாவது செய்துதான் ஆக வேண்டும் என்று அவள் பதைபதைத்தாள். சற்று நேரத்துக்கெல்லாம் அரண்மனை அதிகாரியை அழைத்து வரச் செய்து, ''உதயவர்மரே ! இன்று சக்கரவர்த்தியின் சபையில் சோழ ராஜகுமாரனுடைய விசாரணை முடிந்ததும் அதன் விவரத்தை உடனே எனக்கு வந்து தெரியப்படுத்த ஏற்பாடு செய்ய வேண்டும். ஒரு கண நேரம்கூட இதில் தாமதம் கூடாது'' என்றாள். அரண்மனை அதிகாரி, ''அப்படியே ஆகட்டும்'' என்று சொல்லிச் சபைக்கு ஆளையும் அனுப்பி வைத்தார்.

குந்தவி அன்று வழக்கமான காரியங்கள் ஒன்றும் செய்யவில்லை. நந்தவனம் சென்று மலர் எடுக்கவில்லை. ஆலயங்களுக்கும் போகவில்லை. பல்லைக் கடித்துக் கொண்டு இராஜ சபையிலிருந்து எப்போது ஆள் வரும் என்று எதிர்பார்த்துக் கொண் டிருந்தாள். கடைசியாக அந்த ஆளும் வந்து சேர்ந்தான். விசாரணையையும் முடிவையும் விவரமாகக் கூறினான்.

### தேடாமல் வந்த ஜோக்-4



தன் மாமனாரிடம் அப்பாவாக நடிக்கும் பிச்சைக்காரரை அறிமுகப் படுத்தும்போது,

'' இவர்தான் என் அப்பா... He is an M.B.A.''

மாமனார்: I see.

'' ஆமாம். He is a Member of the beggars Association !''

சக்கரவர்த்தி ரொம்பவும் கருணை காட்டினாராம். ''இப்போதாவது பல்லவ சாம்ராஜ்யத்துக்குப் பணிந்து கப்பம் செலுத்துவதாக ஒப்புக் கொண்டாயானால், உன்னுடைய குற்றத்தை மன்னித்துச் சோழ ராஜ்யத்துக்கும் முடி சூட்டி வைக்கிறேன்'' என்றாராம். அதைச் சோழ ராஜகுமாரன் ஒரே பிடிவாதமாக மறுத்து விட்டானாம். அதோடு நில்லாமல், சக்கரவர்த்தியைத் தன்னோடு வாட்போர் செய்யும்படி அழைத்தானாம்! அதன்மேல் சக்கரவர்த்தி தீர்ப்புக் கூறினாராம். அவனுடைய இளம் பிராயத்தை முன்னிட்டு அவனுக்கு மரண தண்டனை விதிக்காமல் தேசப் பிரஷ்ட தண்டனை விதிப்பதாகவும், மறுபடியும் சோழ நாட்டுக்குள் அவன் பிரவேசித்தால் சிரசாக்கினைக்கு உள்ளாக வேண்டு மென்றும் சொல்லி, உடனே அவனைக் கப்பலேற்றித் தீவாந்தரத்துக்கு அனுப்பிவிடும்படியும் கட்டளையிட்டாராம். அதன்படி அவனை உடனே மாமல்லபுரம் துறைமுகத்துக்குக் கொண்டுபோய் விட்டார்கள் என்பதையும் இராஜ சபையிலிருந்து வந்த ஆள் தெரிவித்தான்.

விக்கிரமனுக்கு மரண தண்டனை விதிக்கப்படவில்லை என்ற செய்தி குந்தவிக்குச் சிறிது ஆறுதல் அளித்தது. ஆனால் அவனைக் கப்பல் ஏற்றி அனுப்பப் போகிறார்கள். இனிமேல் என்றென்றைக்கும் அவனைத் தான் பார்க்க முடியாமற் போகலாம் என்ற எண்ணம் மிகுந்த துன்பத்தை உண்டாக்கிற்று. அந்த அரசிளங்குமரன் கப்பலேறிப் போவதற்கு முன் ஒரு தடவை அவனைப் பார்த்துவிட வேண்டும் என்ற ஆவல் பொங்கி எழுந்தது. அவளுடைய உடம்பையும், மனத்தையும், ஆத்மாவையுமே இந்த ஆவல் கவர்ந்துகொண்டது. அந்த இராஜ குமாரனை உடனே பார்க்க

## தேடாமல் வந்த ஜோக்-5



''இதுதான் சார் எங்க வீட்டு நாய். ஒரு காலத்தில் பெரிய போலீஸ் நாயாக இருந்தது!''

''பார்த்தா அப்படித் தோணலியே!''

''தெரியாது.... என்னு இப்போ அது மஃப்டியில் இருக்கு!''

'தேடினேன் வந்தது' என்ற மேடை நாடகத்திலிருந்து சில ஜோக்குகள்:

தொகுப்பு: எஸ். பிரகாஷ்

---

வேண்டும் என்று அவனுடைய தேகத்தின் ஒவ்வோர் அணுவும் துடித்தது. அவனைத் தான் நேரில் பார்த்துப் பேசினால் அவனுடைய மனத்தை ஒருவேளை மாற்றித் தன் தந்தையின் கீழ்ச் சிற்றரசனாயிருக்கச் சம்மதிக்கும்படி செய்யலாம் என்ற ஆசையும் உள்ளத்தின் ஒரு மூலையில் கிடந்தது.

குந்தவி அக்கணமே தன் தந்தையைப் பார்க்க விரும்பினாள். விக்கிரமனுடைய விசாரணை முடிந்ததும் சக்கரவர்த்தி குதிரைமீதேறி எங்கேயோ போய்விட்டார் என்றும், போன இடம் தெரியாது என்றும் தெரியவந்தபோது அவளுக்குப் பெரிதும் ஏமாற்ற முண்டாயிற்று. சிறிது நேரம் சிந்தனையில் ஆழ்ந்திருந்தாள். பிறகு அரண்மனை அதிகாரியை அழைத்து, ''உதயவர்மரே! மல்லைத் துறைமுகத்துக்கு நான் உடனே போக வேண்டும். என் தாயாரின் நவரத்தின மாலையைக் காணவில்லை. மாமல்லபுரத்து அரண்மனையில் போட்டுவிட்டு வந்து விட்டேன் போலிருக்கிறது. நானே போய்த்தான் தேடி எடுக்க வேண்டும்'' என்றாள்.

உதயவர்மர் சிறிது தயங்கி, ''சக்கரவர்த்தி வந்தவுடன் போகலாமே!'' என்றதும் குந்தவிக்கு வந்த கடுங்கோபத்தைக் கண்டு அவர் மிரண்டு விட்டார். குந்தவி தேவியின் கட்டளைக்கு மாறு சொல்லும் வழக்கம் இதுவரை இல்லையாதலால், மாமல்லபுரத்துக்கு அவ்வளவு அவசரமாகவும் தனியாகவும் அவள் போகும் யோசனை ஆச்சரியம் அளித்தாலும் அரண்மனை அதிகாரி உடனே அதற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்தார். சற்று நேரத்துக்கெல்லாம் குந்தவி பரிவாரங்களுடன் பல்லக்கில் மாமல்லபுரத்துக்குப் பிரயாணமானாள். இதுவரையும் இல்லாத வழக்கமாக வழியில் பல்லக்குச் சுமப்பவர்களை அவள் அடிக்கடி விரைந்து செல்லுமாறு ஆக்ஞாபித்தாள். கடைசியாக மாமல்லபுரத்தை அடைந்ததும், விக்கிரமனை ஏற்றிக் கொண்ட கப்பலானது துறைமுகத்திலிருந்து அப்போதுதான் பாய் விரித்துக் கிளம்பிக் கொண்டிருந்தது என்று தெரிய வந்தது.

குந்தவியின் பல்லக்கு கடற்கரையை அடைந்தபோது அவளுடைய கண் முன்னால் தோன்றிய காட்சி இருதயத்தைப் பிளப்பதா யிருந்தது. சிங்கக் கொடி பறந்த பாய் விரித்த கப்பல் கிளம்பிக் கடலோரமாகப் போய்க் கொண்டிருந்தது. அதில் நேற்று அவள் வீதியில் பார்த்த இராஜகுமாரன் கயிற்றால் பிணிப்புண்ட கைகளைக் கூப்பிய வண்ணம் நின்று கொண்டிருந்தான். அச்சமயம் அவனுடைய பார்வை கரை மீதுதான் இருந்தது. அவ்வளவு பக்தி விசுவாசத்துடன் அவன் யாரைப் பார்க்கிறான் என்று குந்தவி தெரிந்து கொள்ள விரும்பி, கரையில் அவனுடைய பார்வை சென்ற திசையை நோக்கினாள். ஜடாமுடி தரித்த கம்பீரத் தோற்றமுடைய சிவனடியார் ஒருவர் அங்கே நின்று கொண்டிருந்தார். அவர் தம்து வலது கரத்தைத் தூக்கி விக்கிரமனை ஆசீர்வதிக்கும் நிலையில் காணப் பட்டார்.

மறுபடியும் குந்தவி விக்கிரமனை நோக்கினாள். ஒரு கண நேரம் அவனுடைய பார்வை இவள் பக்கம் திரும்புவது போலிருந்தது. ''இது நிஜந்தானா? அல்லது பிரமையா?'' என்று நிச்சயமாய்த் தெரிவதற்குள்ளே விக்கிரமன் முகத்தைத் திருப்பிக் கொண்டு மீண்டும் சிவனடியார் இருந்த திசை நோக்கினான்.

குந்தவிக்கு அப்போது சட்டென்று ஒரு ஞாபகம் வந்தது. சோழ ராஜகுமாரனுக்குத் துர்ப்போதனை செய்து அவன் புத்தியைக் கெடுத்தவர் ஒரு சிவனடியார் என்பதாக நேற்று அப்பா சொல்லவில்லையா? அந்தப் பொல்லாத சாமியார் இவராகத்தான் இருக்க வேண்டும்! சந்தேகமே இல்லை!

அந்தச் சாமியாரைக் கையும் மெய்யுமாய்ப் பிடித்துவிட வேண்டும் என்ற எண்ணத்துடன், குந்தவி பல்லக்கை அவர் இருந்த திசையை நோக்கி விரைந்து போகும்படி கட்டளையிட்டாள். ஆனால் அடுத்த கணத்திலேயே சிவனடியார் துறைமுகத்தில் வேலை செய்து கொண்டிருந்த ஆட்களுக்குப் பின்னால் மறைந்து மாயமாய்ப் போய் விட்டார்! குந்தவி எவ்வளவோ தேடியும் அவரைக் கண்டுபிடிக்க முடியவில்லை.

இதற்குள்ளாக விக்கிரமன் இருந்த கப்பலும் கடலில் வெகு தூரம் போய் விட்டது.

(தொடரும்)

# வசந்த மலர் மேனி
# கோகுல் 'ஸாண்டல்வுட்'

கோகுல் மங்கை,
மணம் கவர் நங்கை.
அவள்
தனிக் கவர்ச்சியை
நீங்களும் பெற
கோகுல் ஸாண்டல்வுட்
டாய்லெட் பவுடரை
உபயோகியுங்கள்
தூய சந்தனம்,
வெளி நாட்டு வாசனைத்
திரவியங்கள், புலவித
இயற்கை மூலிகைகள் கலந்த
பிரத்யேக 'மைக்ரோ-பைன்'
முறையில் தயாரிக்கப்படுவது
கோகுல் ஸாண்டல்வுட்
டாய்லெட் பவுடர்.

## கோகுல்

**ஸாண்டல்வுட்**
**டாய்லெட் பவுடர்**

**டி.எஸ்.ஆர் & கம்பெனி,**
**மதராஸ்**
பிரத்யேக தயாரிப்பு




**டி.எஸ்.ஆர் & கம்பெனி, மதராஸ்**
ராமாபுரம், மதராஸ்-600 089.

ADWAVE/TSR/449A

அமரர் கல்கி

அத்தியாயம் 56

# கைதியின் கதை

மகாலக்ஷ்மி பாங்கின் பிராஞ்சு மானேஜர் கருணாகரனுக்கு இரண்டு பிள்ளைகள். மூத்தவன் சட்டப் படிப்பு முடித்துக் கொண்டு உத்தியோகம் ஏற்கும் நிலையில் இருந்தான். இளைய பையன் உமாகாந்தன் கல்லூரியில் படித்துக் கொண்டிருந்தான். அவன் தேசபக்தி மிக்கவன். இரண்டொரு முறை மறியல் செய்து தடியடி பட்டு ஆஸ்பத்திரியில் இருந்து விட்டு வந்தான். இன்னும் சிறை செல்லும் பாக்கியம் கிடைக்கவில்லையே என்று ஏங்கிக் கொண்டிருந்தான்.

'பிள்ளை இப்படி நடந்து கொள்கிறானே, நாளைக்கு இவன் சிறைக்குப் போகும்படி நேர்ந்தால் என்ன செய்வது?' என்று ரொம்பவும் கவலைப்பட்டுக்கொண்டிருந்தார் கருணாகரன். அவன் சிறை சென்றால் அது தனக்குப் பெரிய அவமானம் என்று நினைத்தார். ஆனமட்டும், ''மறியல், போராட்டம் இதெல்லாம் வேண்டாம். சிரத்தையாகப் படித்துத் தேறி நல்ல உத்தியோகத்தில் அமர்கிற வழியைப் பார்'' என்று எடுத்துச் சொன்னார். ஆனால் உமாகாந்தன் அதையெல்லாம் காதில் வாங்கிக் கொள்ளவே யில்லை. சுதந்திரப் போரில் தானும் இயன்றமட்டில் ஈடுபட்டதுடன் புரட்சியாளர் பலருக்கு இரகசியமாக உதவியும் வந்தான்.

அவனுடைய இந்தப் போக்கினால் மிகவும் பாதிக்கப்பட்டிருந்த கருணாகரனுக்கு இருந்த ஒரே ஒரு ஆறுதல், மூத்த மகனாவது சமர்த்தாயிருக்கிறானே, சட்டப் படிப்பை முடித்துக் கொண்டு நல்ல உத்தியோகத்தில் அமரத் தயாராய் இருக்கிறானே என்பதுதான். உமாகாந்தனை உள்ளத்திலிருந்து ஒதுக்கிக் கோவர்த்தனனை அடிக்கடி எண்ணிப் பெருமைப்பட்டுக் கொண்டிருந்தார்.

ஆனால் உண்மையில் தமையன் கோவர்த்தனன் கெட்ட சகவாசங்களால் குடிப்பது, பணம் வைத்துச் சீட்டாடுவது போன்ற காரியங்களில் இறங்கி மார்வாரிகளிடம் ஏகமாகக் கடன்பட்டிருந்தான். இது தகப்பனாருக்குத் தெரியாது. ஒரு கட்டத்தில், ''உடனே கடனைத் திருப்பித் தராவிட்டால் வாரண்டு'' என்று மார்வாரி கடைசி எச்சரிக்கை செய்து விட்டான். 'அவன் வீட்டு வாசலுக்கே வந்து ரகளை செய்தால் என்ன நடக்கும்? என்னைப் பற்றிப் பெரிதாக நினைத்துக் கொண்டிருக்கும் அப்பா மனமுடைந்து போய் அதிர்ச்சியில் இறந்தே விடுவார். அப்படி ஒருவேளை இந்தச் செய்தி கேட்டு அவர் இதயம் நின்றுபோகவில்லை என்றாலும் ஒரு முழக் கயிறு தேடுவார். அவர் மானஸ்தர். இந்த இக்கட்டிலிருந்து எப்படித் தப்புவது?' என்று கோவர்த்தனன் யோசித்துக் கொண்டிருந்தான்.

இந்தச் சந்தர்ப்பத்தில் அவன் சற்றும் எதிர்பாராத விதமாக உமாகாந்தனுக்கும் தகப்பனார் கருணாகரனுக்கும் இடையில் பெரிய வாக்குவாதம் ஒன்று நிகழ்ந்தது. அதைக் கேட்டுக் கொண்டே இருந்த கோவர்த்தனன், தான் மார்வாரியின் இரும்புப் பிடியிலிருந்து தப்பிக்க ஒரு வழி புலப்பட்டு விட்டது என்று எண்ணினான். தகப்பனுக்கும் பிள்ளைக்கும் இடையில் நடந்த சொற்போரைக் காது கொடுத்துக் கேட்டான்.

காயம் பட்ட தேசத் தொண்டர்களின் உதவி நிதிக்காகத் தன் தகப்பனாரிடம் கணிசமான தொகையை நன்கொடையாகக் கேட்டான் உமாகாந்தன்.

கருணாகரனோ, ''ஊரில் இருக்கிற நன்றி கெட்ட நாய்க்கெல்லாம் சிகிச்சை பண்ண இங்கே என்ன பணம் கொட்டி வைத்திருக்கிறதா?'' என்றார்.

''அப்பா! நீங்கள் தேசபக்தர்களை அவமரியாதையாகப் பேசியதை மறந்து விடுகிறேன், பணம் கொடுத்தால்!'' என்று உமா காந்தன் பல்லைக் கடித்துக் கொண்டு பேசினான்.

''பணத்துக்குத் திருடப் போக வேண்டியதுதான்'' என்றார் கருணாகரன்.

''அதை நீங்கள் சுலபமாகச் செய்யலாமே? மகாலக்ஷ்மி பாங்கின் பிராஞ்சு மானேஜர் தானே நீங்கள்!'' என்றான் உமா.

தகப்பனாருக்குப் பொல்லாத கோபம் வந்துவிட்டது. ''அடப் பாவி! என்னைப் பார்த்தா அப்படிச் சொன்னாய்? நான் வேலை செய்கிற பாங்கில் நானே கொள்ளையடிக்க வேண்டும் என்று சொல்ல உனக்கு நாக்குக் கூச

வில்லையா?'' என்று மிகுந்த ஆத்திரத்தோடு கேட்டார்.

''கொள்ளையடித்தால் என்ன?'' என்று துடுக்காகப் பேசினான் உமாகாந்தன். ''பாங்கில் இருக்கும் பணமெல்லாம் எங்கேயிருந்து வந்தது? ஏழைகளைக் கொள்ளை யடித்து அடைந்த பணத்தைப் பணக்காரர்கள் பாங்கில் போட்டு வைத்திருக்கிறார்கள், அவ்வளவு தானே?'' என்றான்.

உமாகாந்தன் ஒரு தீவிர சோஷலிஸவாதி. ஆகவே அவன் விளையாட்டாக இப்படிப் பேசவில்லை. இளமை வேகத்துடன் அன்று அவன் மனப்பூர்வமாக நம்பியதையே கூறினான்.

அவன் தகப்பனாரோ நன்றி விசுவாசம், தர்ம நியாயம் முதலிய பண்புகளில் ஊறித் திளைத்து வளர்ந்தவர். எனவே அவரால் தம் மகனுடைய பேச்சைப் பொறுத்துக் கொள்ளவே முடியவில்லை. ரௌத்திராகாரமானார். ''அட சண்டாளா! நீ உருப்பட மாட்டாய் என்று நான் என்றைக்கோ தீர்மானித்து விட்டேன். உன் படிப்புக்கும் அதற்கும் இதற்குமென்று இத்தனை காலம் நான் செலவழித்ததெல்லாம் தண்டம். என் முகத்திலேயே இனி விழிக்காதே! வீட்டை விட்டு வெளியே போ!'' என்று ஆவேசத்துடன் கத்தினார். அவர் மனைவியும் மூத்த மகனும் அவரைச் சமாதானப்படுத்த முயன்று தோற்றனர். அவர் பிடிவாதக்காரர். அந்தப் பிடிவாதத்தைக் குறையின்றி மகன் உமாகாந்தனும் பெற்றிருந்தான். எனவே அவன் வெளியேறி விட்டான்.

அன்றிரவு கருணாகரனுக்குத் தூக்கம் பிடிக்கவில்லை. யாரோ பாங்கியைக் கொள்ளையடிப்பது போல் கனவு கண்டார். திடுக்கிட்டு விழித்துக்கொண்டவர் பாங்கின் வாசல் சாவி, இரும்பு அறைச் சாவி எல்லாம் பத்திரமாக இருக்கின்றனவா என்று ஒரு தடவை பார்க்க நினைத்து வீட்டில் இரும்புப் பீரோவைத் திறந்தார். அவருக்குப் பகீரென்றது. பாங்குச் சாவி வழக்கமாக அவர் வைக்குமிடத்தில் காணோம்! அவருக்கு உடனே உமாகாந்தன் ஞாபகம்தான் வந்தது. அவன்தான் பழி வாங்கும் நோக்கத்துடன் பாங்குச் சாவியைத் தனக்குத் தெரியாமல் கொண்டு போய் விட்டான் என்று தீர்மானித்து விட்டார். பாங்கியை நோக்கிப் பரபரப்புடன் ஓடினார். அந்த இரவு நேரத்தில் வாகன வசதி ஒன்றும் கிடைக்காது. நல்ல வேளையாக பாங்கு ரொம்ப தூரத்திலும் இல்லை. கிளை அலுவலகம் அமைந்திருந்த அதே பேட்டையில்தான் அவருக்கு வீடு. என்றாலும் வயதுக் காலத்தில் பழக்கமில்லாத விதமாக ஓட நேர்ந்ததில் அவருக்கு ஓரேயடியாக வியர்த்துக் கொட்டி, இரைக்கவும் செய்தது. அதையொன்றும் பொருட்படுத்தாமல் அவர் விரைந்தார். பாங்கியை நெருங்கிய போது யாரோ ஒருவன் சுவர் ஏறிக் குதித்து வெளியேறுவது போல் நிழலாகத் தெரிந்தது. ''யார் அது?'' என்று அதட்டினார். பதில் இல்லை. ஓடிப் போய்ப் பார்த்தார். பாங்கியின் இரும்பு அறை திறந்து கிடந்தது. பணப் பெட்டி காலியாக இருந்தது. நெஞ்சம் பதறித் துடிக்க அவர் வாசலுக்கு வந்தார். வாட்ச்மேன் அடிபட்டு மயங்கி விழுந்திருப்பதைப் பார்த்தார். 'திபுதிபு' வென்று யாரோ ஓடும் சத்தம் கேட்டது. இவர் கூடவே, ''திருடன்! திருடன்! பிடி, பிடி!'' என்று கத்திக்கொண்டு ஓசை கேட்ட பக்கமாகச் சாலையில் விரைந்தார்.

உமாகாந்தன் வீட்டை விட்டு வெளியேறும் போது அவன் தாயார் அவனைத் தனியே சந்தித்து அழுதாள். ''அப்பாதான் கோபத்தில் ஏதாவது சொல்கிறார் என்றால் நீயும் உடனே பந்த பாசங்களை அறுத்துக்கொண்டு புறப்பட்டு விடுவதா?'' என்று புலம்பினாள். உமாகாந்தன் பிடிவாதமாக இருந்தான். கடைசியில் அவள் அவனிடம் ஒரு வாக்குறுதி வாங்கிக்கொண்டாள்: அன்றிரவு அவன் அப்பாவும் அண்ணாவும் தூங்கிய பிறகு அவர்களுக்குத் தெரியாமல் அவன் வீடு திரும்ப வேண்டும்; அவள் கையால் இன்னும் ஒருவேளை சாப்பாடாவது சாப்பிட வேண்டும்; அப்புறம் அவளிடம் சற்று நேரம் பேசிக் கொண்டிருந்து விட்டுப் போக வேண்டும். உமாகாந்தன் மனம் இளகி இதற்குச் சம்மதித்தான்.



தாயாருக்குக் கொடுத்த அந்த வாக்குறுதியை நிறைவேற்ற அவன் வீட்டுக்குத் திரும்பியபோது தன் தகப்பனார் வீட்டை விட்டு எங்கோ தலைதெறிக்க ஓடுவதைப் பார்த்தான். அவரைப் பின்தொடர்ந்து அவர் அறியாமல் சென்றான். அவரும் அப்போதிருந்த பரபரப்பில் திரும்பிப் பார்க்கவே தோன்றாமல் ஓடிக் கொண்டிருந்தார். அவர் பாங்கை நெருங்கிய போது உமாகாந்தன் சற்றுத் தயங்கி ஒரு மரத்தின் பின்னால் மறைந்து கொண்டான்.

அவனுக்கு அவர் போக்கு விசித்திரமாகப் பட்டது. சீக்கிரமே புதிருக்கு விடையும் கிடைத்தது. பாங்கின் உள்ளே யிருந்து ஒரு பெரிய தோல் பையுடன் மதில் ஏறிக் குதித்து வெளிப்பட்ட ஒருவன் எதிர்த் திசையில் ஓட ஆரம்பிப்பதைப் பார்த்தான் உமாகாந்தன். கருணாகரனோ ''யாரது!'' என்று அதட்டினாரே யொழிய அவனைத் தொடராமல் பாங்கின் உள்ளே சென்றார், கவலையோடு. களவு போயிருக்கிறதா என்று பார்ப்பதே முதல் காரியமாக எண்ணினார் போலும். ஆனால் உமாகாந்தன் அந்தத் திருடனை விடவில்லை. பின் தூரத்தினான். ஒருசில விநாடிகளில் திருட்டுப் போனதைப் புரிந்து கொண்டு, வெளியே வந்த கருணாகரனும் உமாகாந்தனைப் பின்தொடர்ந்து ஓடி வந்தார்.

''திருடன்! திருடன்!'' என்று அவர் போட்ட கூச்சல் ஒரு பீட் கான்ஸ்டேபின் காதில் விழுந்தது. அவன் விசிலை ஊதிக் கொண்டு கருணாகரனையும் முந்திக்கொண்டு ஓடினான்.

மணியம் செல்வன்

உமாகாந்தனுக்கு, பின்னால் தன் தகப்பனாரும் போலீஸ்காரரும் துரத்தி வருவது புரிந்தது. தன்னையே திருடன் என்று நினைத்து விடுவார்களோ என்று உள்ளூற அவனுக்குப் பயம். இருந்தாலும் உண்மைத் திருடனை விடக் கூடாது என்று வேகத்தை அதிகரித்தான். கடைசியில் ஒரு தாவுத் தாவித் திருடனைப் பிடித்தே விட்டான். தெரு விளக்கின் மங்கலான ஒளி அவன் மீது விழுந்தது. கோவர்த்தனன்!

''தம்பி! என்னைக் காப்பாற்று! இது வெளியே தெரிந்தால் என் வாழ்க்கை பாழாவது மட்டுமல்ல; நம் தந்தையின் இதயம் உடைந்து விடும்'' என்றான் தமையன்.

உமாகாந்தனுக்கு ஒன்றும் வழி தோன்றவில்லை. பேசாமல் பணம் அடங்கிய தோல் பையையும் பாங்குச் சாவிகளையும் தான் வாங்கிக்கொண்டான். ''நீ ஓடிப்போ! நான் எப்படியாவது சமாளித்துக் கொள்கிறேன்'' என்றான். அவன் சென்று மறைந்த திசைக்கு எதிர்த் திசையில் உமாகாந்தன் ஓடத் தொடங்கினான் — அண்ணனைத் தப்புவிப்பதற்காக. ஓரிரு நிமிஷங்களுக்குள் பின் துரத்தி வந்த போலீஸ்காரரின் குண்டாந்தடி பறந்து வந்து அவன் தலையின் பின்புறத்தைத் தாக்கியது. அவன் அப்படியே சுருண்டு விழுந்தான். கையும் களவுமாகப் பிடிபட்ட திருடன் தம் மகன் உமாகாந்தன் எனக் கண்டார் கருணாகரன். அன்று மாலைதான், 'பாங்கைக் கொள்ளையடிப்பதுதானே?' என்று அவன் கேட்டது அவர் நினைவுக்கு வந்தது. ''சீ! உன்னைப் பெற்ற பாபத்தைக் கழுவ ஏழு ஜன்மம் எடுத்தாலும் போதாது!'' என்றார்.

தனக்கும் தகப்பனாருக்கும் இடையில் பாங்குக் கொள்ளை பற்றி வாக்குவாதம் நடந்ததும் அதைத் தொடர்ந்து தான் வீட்டை விட்டு வெளியேறியதும்தான் தன் அண்ணன் கோவர்த்தனனுக்கு பாங்கில் திருடத் தைரியம் அளித்திருக்கிறது என்பது உமாகாந்தனுக்குப் புரிந்தது. பாங்கு கொள்ளையடிக்கப் பட்டிருப்பது மறுநாள் காலை தெரிய வரும்போது உமாகாந்தன் மீதுதான் இயல்பாகத் தகப்பனாருக்குச் சந்தேகம் எழும் என்று கோவர்த்தனன் எண்ணியிருக்கிறான். ஆனால் கோவர்த்தனன் போட்ட திட்டம் திசை மாறிப் போயிற்று. உமாகாந்தனை மறுநாள் காலை போலீஸார் தேடிக் கொண்டிருப்பதற்குப் பதில் அன்றிரவே கையும் களவுமாகப் பிடிபட்டு விட்டான். கோவர்த்தனன் பற்றி உமாகாந்தன் வாய் திறக்கவில்லை. தன்னையே குற்றவாளியாக்கிக் கொண்டான். ஆறு வருஷங்கள் தண்டனை கிடைத்தது.

## அத்தியாயம் 57

# பவானியின் கட்டளை

**தா**ன் கைதியான கதையைக் கூறிவிட்டுக் கடைசியாக உமாகாந்தன் சொன்னான்: ''பவானி! நீ நம்புகிறாயோ இல்லையோ, நடந்தது இதுதான். தேசபக்தன் என்ற முறையில் ஆயுட் காலத்துக்குச் சிறையிலிருப்பேன்; ஆனால் திருடன் என்ற பட்டத்துடன் செய்யாத குற்றத்துக்குச் சிறைவாசத்தை அனுபவித்துக் கொண்டிருக்க என்னால் முடியவில்லை. வேதனை பிடுங்கித் தின்றது. அதனால் கிடைத்த முதல் சந்தர்ப்பத்தில் தப்பித்துக் கொண்டு வந்தேன். இந்த நாட்டை விட்டு வெளியேறு முன் உன்னை ஒரு தடவை பார்த்து என் கதையைக் கூறிவிட வேண்டும் என்பதுதான் எனக்கு ஒரே ஆசை. அது நிறைவேறி விட்டது. இனி நான் கள்ளத் தோணி ஏறலாம்'' என்றான்.

''கள்ளத் தோணியா?'' என்று வியப்புக்கு மேல் வியப்படைந்தவளாகக் கேட்டாள் பவானி.

''ஆமாம், பவானி! ரயிலேறிச் சென்று பிறகு கோடிக்கரையை அடைந்துவிட்டால் அங்கிருந்து படகில் இலங்கைக்குப் போய் விடுவேன். அப்புறம் எப்படியாவது மலாய் நாட்டை அடைந்து விடுவேன். அங்கே நேதாஜீ சுதந்திரப் படை திரட்டி வருகிறார் அல்லவா? அதில் சேர்ந்து விடுவேன். நான் சிறையிலிருந்து தப்பியதே அந்த நோக்கத்தில் தான்!''

பவானியின் முகம் வெளிறிற்று. தேகம் நடுங்கியது. பதற்றத்துடன், ''அழகுதான்! அத்தனை ஆபத்தான பயணத்தை மேற்கொள்ளக் கூடிய உடல் நிலையிலா நீங்கள் இருக்கிறீர்கள்?'' என்று அதட்டலாகச் சொன்னாள். தவமிருந்து பெற்ற பொக்கிஷம் அது கிடைத்த கணத்திலேயே கைநழுவிப் போய்விடும் போலிருந்தது. அப்படி அதைப் பறி கொடுப்பதா? என்று தவித்தது அவள் உள்ளம்.

''பவானி! உடம்பில் பலம் சேரட்டும் என்று சொல்லிக் கொண்டு இங்கே உட்கார்ந்திருந்தால் மட்டும் ஆபத்து இல்லையா?'' என்று கேட்டான் உமாகாந்தன். ''உன்னையும் சேர்த்தல்லவா ஆபத்துக்கு உள்ளாக்கியவனாவேன்! என்னைப் போக விடு, பவானி! அதற்கு முன் மூன்று வரங்களைக் கொடு!''

''நான்தான் என்னையே கொடுத்திருக்கிறேனே?'' என்று விம்மினாள் பேதை.

அவன் கரங்களைப் பற்றி விரல்களை வருடினான். ''எனக்குத் தெரியாதா அது பவானி? நான் இப்போது சொன்ன கதை உங்கள் இருவருடன் மட்டும் இருக்க வேண்டும். இது முதல் வரம். இரண்டாவது, உன் புகைப்படம் ஒன்று கையெழுத்துப் போட்டுத் தர வேண்டும். மூன்றாவது... மூன்றாவது...''

''மூன்றாவது...?''

''கொஞ்சம் பணம் வேண்டும். நீண்ட தூரப் பயணம் அல்லவா?''

பவானி அழுதுகொண்டே சிரித்தாள்.

''அப்பாடா! இதைக் கேட்க நீங்கள் இவ்வளவு தயங்க வேண்டுமா? அதுவும் என்னிடம்?'' என்றாள். தொடர்ந்து, ''மூன்று வரங்களை நான் தருகிறேன்; பதிலுக்கு நீங்கள் எனக்கு ஒரே ஒருவரம் கொடுங்கள்'' என்றாள்.

''என்ன பவானி? திருட்டுப் பட்டம் சுமத்தப்பட்டுப் போலீஸாருக்குப் பயந்து சதா ஓடி ஒளிந்து திரிந்து கொண்டிருக்கும் நான் உனக்கு என்ன வரம் தர முடியும்?''

''நீங்கள் போகும் இடத்துக்கு என்னையும் அழைத்துச் செல்லுங்கள். அதுதான் நான்

# ஸிக்மாவால் சுவர்களுக்கும் அறைகளின் உட்கூரைகளுக்கும் பட்டுப்போன்ற வழவழப்பைத் தருகிறது.




வானவில்லின் வர்ணஜாலங்களினால்

**ஸிக்மாவால்**

டீலக்ஸ் அக்ரிலிக் எமல்ஷன் பெயிண்ட்
மற்றும் ப்ளாஸ்டிக் எமல்ஷன் பெயிண்ட்




டிஸ்ட்ரிபியூட்டர்கள்: M/s. இன்டோகெம் லிமிடெட், கமானி பில்டிங்
62-54, ரத்தன் பஜார், சென்னை - 600 003. போன்: 37602

# தலைவலி உங்களைத் தாக்கும்போது
# ஸாரிடான் கொண்டு அதைத் தாக்குங்கள்.





உங்கள் எல்லாத் தலைவலிகளையும் போக்குகிறது ஒரே ஒரு **ஸாரிடான்**

ரோஷ்

வேண்டும் வரம். உங்களால் முடியாத காரிய மில்லையே?''

''பவானி!'' என்று அதுவரையில் மௌன மாக இருந்த அவள் மாமா குணசேகரன் அதட்டினார். ''இது என்ன அசட்டுத்தனம்?''

உமாகாந்தனோ தேகமெல்லாம் புல்லரித் துப்போகச் சிலிர்த்துக் கொண்டான்.

''பவானி! நிஜமாகவா சொல்கிறாய்? நான் மேற்கொள்ளப் போகும் பயணம் எவ்வளவு ஆபத்தானது என்பது உனக்குத் தெரியாதா? தெரிந்தும் இந்தப் பரதேசியோடு புறப்பட்டு வரத் தயாராக இருக்கிறாயா? உன் காதல் அவ்வளவு ஆழமானதா? எவ்வளவு பாக்கிய சாலி நான்!''

''உமாகாந்த்! நீ செய்வது கொஞ்சமும் சரியில்லை. உன் வாழ்க்கையைத்தான் ஏதோ அண்ணனுக்காகவும், தேசத்துக்காகவும் தியா கம் செய்வதாகக் கூறிக்கொண்டு பாழடித்துக் கொண்டாய். பவானியின் வாழ்க்கையையும் குட்டிச்சுவராக்க உனக்கு என்ன உரிமை இருக்கிறது?'' என்று கோபமாகக் கேட்டார் குணசேகரன்.

''மாமா! இது என்ன இப்படிப் பேசு கிறீர்கள்? ஒரு பெண் தன் மனம் விரும்பிய வனுடன் இருந்து அவன் வாழ்க்கையின் சுக துக்கங்களைப் பகிர்ந்து கொள்வது தவறா? அவள் தன் மாமாவின் சொற்படி கேட்டு ஒரு கொள்ளைக்காரனை, தம்பியைக் குற்றவாளி யாக்கிய கோழையைக் கல்யாணம் பண்ணிக் கொண்டால் அவள் வாழ்க்கை குட்டிச்சுவ ராகாதா?''

''கோவர்த்தனன் அப்படிப்பட்டவர் என் பதற்கு என்ன சாட்சி? இவன் வார்த்தை தானே?''

''நீதிமன்றத்துக்குத்தான் மாமா சாட்சி யங்கள் வேண்டும். உள்ளம் என்கிற நியாய ஸ்தலத்துக்கு மனச்சாட்சியே போதும்'' என்றாள் பவானி நாத் தழுதழுக்க.

''கோவர்த்தனனை நீ கல்யாணம் செய்து கொள்வதா? அவன் இந்த ஊரில்தான் இருக்கிறானா?'' என்று உமாகாந்த் அதிசயத் துடன் கேட்டான்.

''ஆமாம் உமா! நீங்கள் சிறையிலிருந்து விடுதலை பெற்றோ அல்லது தப்பித்துக் கொண்டோ வரும்போது நேரே கல்கத்தா சென்று அங்கு என்னைப் பற்றி விசாரித்து என்னைத் தேடிக் கொண்டு இங்கே தான் வரு வீர்கள் என்று அவருக்குத் தெரியும். அதனால் இந்த ஊருக்கு வந்து சதா என்னைக் கண் காணித்துக் கொண்டிருக்கிறார். என்னை எப் படியாவது கல்யாணம் செய்து கொண்டு விட்டால் பிறகு இந்த ஜன்மத்தில் உங் களால் அவருக்கு எந்த ஆபத்தும் நேராது அல்லவா? அந்த நிம்மதியைப் பெறுவதற் காகத் தம்மாலான முயற்சிகளை யெல்லாம் செய்து பார்க்கிறார். நானும் அவர் தாக்கு தலுக்கு ஈடு கொடுத்து இதுநாள் வரை தட்டிக் கழித்துக் கொண்டே வந்திருக்கிறேன்.

''உங்களைப் பின்தொடர்ந்து காயப்படுத் திய சி. ஐ. டிக்கள் கூட அவருடன் அடிக்கடி தொடர்பு கொண்டுதான் இருக்கிறார்கள். உங்களை 'அடிபட்ட புலி' என்று வர்ணித்து உங்களுக்கு அடைக்கலம் கொடுப்பது பெரிய குற்றம் என்று என்னை எச்சரித்து விட்டுப்



**கவனித்தீர்களா ?**

அக்டோபர் 12ந் தேதி இந்தியாவில் 95 பேர்களைப் பலி கொண்ட விமான விபத்து நடந்த விமான நிலையம் **சாந்தாகுரூஸ்.**

அக்டோபர் 13ந் தேதி தென் அமெ ரிக்காவில் உள்ள பொலிவியாவில் 100 பேர்களைப் பலி கொண்ட விமான விபத்து நடந்த நகரத்தின் பெயர்: **சாந்தாகுரூஸ்!** —''பழம்நீ''

போனார். அப்போது நீங்கள் தூக்க மருந்து சாப்பிட்டுவிட்டு மாடி அறையில்தான் நன் றாகத் தூங்கிக் கொண்டிருந்தீர்கள்.''

''நான் இங்கிருப்பது தெரிந்து விட்டதா அவனுக்கு?'' கலவரத்துடன் கேட்டான் உமாகாந்தன்.

''இல்லை. ஆனால் நீங்கள் இங்கே என்னைத் தேடி வரலாம்; தஞ்சம் புகலாம் என்று சந் தேகிக்கிறார்.''

''பவானி! நான் இனி இங்கே தொடர்ந்து இருப்பது ரொம்ப ஆபத்து. எனக்கு மட்டு மல்ல. உனக்கும் மாமா குணசேகரனுக்கும் கூடத்தான். எனக்கு விடை கொடு! நான் கிளம்புகிறேன்.''

''நான் கேட்ட வரம்?''

''வரம் கேட்பவர் தாழ்ந்த நிலையிலும் வரம் கொடுப்பவர் உயர்ந்த நிலையிலும் இருக்க வேண்டும் பவானி. இன்று நான் உன்னிடம் அடைக்கலம் புகுந்தவன்.''

''அப்படியானால் கட்டளை யிடுகிறேன்! என்னை உங்களுடன் அழைத்துப் போங்கள்'' என்றாள் பவானி கம்பீரமாக.

இந்தச் சமயத்தில் வாசல் கதவை யாரோ தடதடவென்று தட்டும் சத்தம் கேட்டது. ''பவானி! பவானி! குணசேகரன் ஸார்!'' என்று கூப்பிடும் குரலும் அடுத்து ஒலித்தது.

''கல்யாணம் அல்லவா வந்திருக்கிறான்! நீங்கள் இங்கேயே பேசிக் கொண்டிருங்கள். நான் கீழே போய் என்ன விஷயம் என்று கேட்டு அவனை அனுப்பிவிட்டு வருகிறேன்'' என்றார் குணசேகரன்.

''நாம் அதிகாலையில் எழுந்து காரில் புறப் படலாம். இப்போது சீக்கிரம் படுத்துக் கொள்ளுங்கள்'' என்று சொல்லிப் பவானி உமாகாந்தனைக் கைத்தாங்கலாகப் பற்றிப் படுக்கை அறைக்கு அழைத்துப்போனாள்.

கீழே சென்ற குணசேகரனிடம் ''பவானி எங்கே?'' என்று வினவினான் கல்யாணம்.

''அவள் மாடியில் படுத்துக் கொண்டு விட்டாள். என்ன விஷயம்?'' என்றார் குண சேகரன்.

''ரொம்ப அவசரம்! அவளை நான் உடனே பார்த்தாக வேண்டும்'' என்று கூறிப் படி யேறத் தொடங்கினான் கல்யாணம். தடுக்கப் போன குணசேகரனை முரட்டுத்தனமாய் ஒதுக்கித் தள்ளிவிட்டுப் படிகள் மீது பாய்ந்து ஏறினான்.

(தொடரும்)



# தாயில்லாக் குழந்தை

ஜெயசித்ரா 'பெல்பாட்ஸ்' அணிந்து விழுந்தடித்துக்கொண்டு ஓடுகிறார்; அவரைத் தொடர்ந்து இரு முரடர்கள் ஓடுகின்றனர்; மோட்டார் சைக்கிளில் ஓடுகிறார், ஜெயசித்ரா; முரடர்கள் ஜீப்பில் அவரைத் துரத்துகின்றனர்; முரட்டுக் காளையை ஓட ஓட விரட்டுகிறார் விஜயகுமார்; பழைய காரில் நாகேஷும் அசோகனும் ஓடுகின்றனர்; இதற்கும் மேலே படம் ஓட என்ன வேண்டும் என்கிறீர்கள் ? மேற்கூறிய ஓட்டங்களைத் தடுத்து நிறுத்த, மூன்று பாடல்கள் இருக்கின்றன !

இரட்டை வேடம் போடுவது நிஜவாழ்க்கையில் மிகப் பெரிய தவறு. ஆனால் சினிமாவில் அது பெரிய வாய்ப்பு.

பணக்காரப் பெண் சித்திரா மாமன் மகனிடமிருந்து தப்பியோட முயன்று தாயில்லாக் குழந்தைக்குத் தாயாக நடிக்கும் நிலையில் நிர்ப்பந்தமாக அகப்பட்டுக் கொள்கிறார். இறந்து போன சிவகாமியின் உருவமும், சித்ராவும் ஒரே மாதிரி இருப்பதால் திரைக் கதையில் பல குழப்பங்கள், சிக்கல்கள், 'சஸ்பென்ஸ்'கள்....! பழைய, மிகப் பழைய குப்பைகளைக் கிளறி அதிலிருந்து திரைக் கதையைத் தயாரித்திருக்கிறார்கள் ! என்னத்தைச் சொல்ல ! அநுபவம் மிக்க படத் தயாரிப்பாளர்களே இப்படிச் செய்தால்... ?

ஜெயசித்ரா திறமை மிக்க நல்ல நடிகை. இரட்டை வேடத்தில் சிறப்பாக நடித்திருக்கிறார்.

ஹீரோ விஜயகுமார் வீரம் மிக்க விளையாட்டுக்களான ஏறு பிடித்தல், ரேக்ளா ரேஸ் முதலியவைகளில் சக்கைப் போடு போட்டு ஒரு கண்டு விரலில்கூடக் காயம் படாமல், ஒரு கோமகவரியின் காதலுக்குப் பாத்திரமாகி விடுகிறார் !

ஏவி. எம். ராஜன் ஒரு முதியவராக வந்து பாந்தமாக நடிக்கிறார். இப்படத்தில், பேபி பபிதாதான் ஹீரோயின் ! குழந்தைக்கு நிறைய 'சான்ஸ்'! நன்றாய் நடித்திருக்கிறாள்.

தண்டாயுதபாணி பிலிம்ஸாருக்கே உரிய பாணியில் ஏறு அடர்த்தல் காட்சி பிரமாதமாயிருக்கிறது. அந்தக் காளைக்கு நட்சத்திர அந்தஸ்து கொடுத்துவிட வேண்டியதுதான்!

இவ்வண்ணப் படத்தின் ஒளிப் பதிவு சிறப்பிடம் பெறுகிறது. வி. ராமமூர்த்தி பாராட்டும் விதத்தில் காமிராவை அதியற்புதமாக இயக்கியிருக்கிறார்.

நாகேஷும், அசோகனும் நகைச்சுவைப் பகுதியின் நாயகர்களாக விளங்குகின்றனர். ''நீங்க இதையும் செய்வீங்க. இதுக்கு மேலே எதையும் செய்வீங்க'' என்று அடிக்கடி பாட்டாகப் பாடி, அசோகன் சிரிக்க வைக்கிறார். இதில் சிரிப்பதற்கு என்ன இருக்கிறது என்று கேட்காதீர்கள். எல்லாரும் கொல்லென்று சிரிக்கும்போது நீங்களும் முடிந்தால் சிரியுங்கள். இல்லாவிட்டால் போங்கள் !

தூயவன் வசனம் எழுதியிருக்கிறார். ஆர். தியாகராஜன் டைரக்ட் செய்திருக்கிறார்.

சாதாரணமாகத் தாயில்லாக் குழந்தை என்றாலே எல்லாரும் அநுதாபப்படுவார்கள். இது தேவரின் தாயில்லாக் குழந்தை! பிழைத்துக் கொள்ளும்!

—காந்தன்

# போட்டிக் கதை—9

# களங்கம்

ராஜ சியாமளா

''ஒரு துளி ஹைட்ரோக்ளோரிக் அமிலத்தை உங்கள் உடம்பின் ஏதாவது ஒரு பாகத்தின் மீது தெளித்துக் கொண்டு அதன் பயங்கரமான விளைவைப் பாருங்கள். ஆனல் அதே அமிலத்தை நம் வாழ்நாள் முழுதும் ஜாடராக்னியாய், உண்பவற்றை யெல்லாம் ஜீரணிக்கச் செய்வதாய், நம் உடலுக்குள் கரப்பியாக இறைவன் வைத்திருக்கிருனே, அது ஏன் நம் உடலை ஒன்றும் செய்வதில்லை ? இறைவனைவிடச் சிறந்த 'பையோகெமிஸ்ட்' யார் ? வேறு யாரால் இவ்வாறு செய்ய முடியும் ?''

தலைமையுரையில் இத்தகைய சிந்தனைக் கிற்றுக்களை இழைய விடுவது டாக்டர் சபேசனின் வழக்கம். அவர் பிரபல 'பயோ கெமிஸ்ட்' நிபுணர் மட்டும் அல்ல. விஞ்ஞானத்தின் எல்லாப் பிரிவுகளிலும் கரை கண்டவர். அத்துடன் விஞ்ஞானத்தின் எல்லைக் கோடுகள் எல்லாமே மெய்ஞானத்தின் சுற்றுச் சுவர்களுக்குள்தான் என்ற கொள்கையையும் உடையவர். இந்த மேதையின் வரலாற்றை, ''டாக்டர் ஜான்ஸனு''க்கு ஒரு ''பாஸ்வெல்'' போல், ''ஷெர்லக் ஹோம்ஸ''க்கு ஒரு ''டாக்டர் வாட்ஸனை''ப்போல் கூடவே இருந்து அதை வருங்காலத் தலைமுறையினருக்குத் தரவேண்டும் என்று கூறி ஒரு மேஞட்டு ஆராய்ச்சிக் கழகம் என்னை அமர்த்தியுள்ளது. டாக்டர் சபேசனும் அதற்கு ஒப்புக் கொண்டு, மதுரையில் தம் வீட்டிலேயே மாடியறையில் தங்க வழி செய்துள்ளார்.

மதுரையில் நடந்த அந்த மாநாட்டுப் பிரதிநிதிகளைத் தனியே சந்தித்து, என்னுடைய வரலாற்றுநாயகனைப் பற்றி அவர்கள் அபிப்பிராயங்களைச் சேகரித்துக் கொண்டு டாக்டரின் வீடு திரும்பும்போது நேரமாகி விட்டது. அயர்ந்து தூங்கிக் கொண்டிருந்தவரை எழுப்பு கிருேமோ என்ற ஐயத்துடன் 'பஸ்ஸரை' மெல்ல அழுத்தினேன். கதவு திறக்கச் சற்றுத் தாமதமாயிற்று. கதவைத் திறந்தவரின் முகத்தில் ஓர் அதீதமான ஒளி, நான் இத்தனை நாட்களாகக் கண்டிராத ஒளி தெரிந்தது. ஒருவேளை மாநாட்டுப் பிரதிநிதிகள் சொன்ன புகழ் மாலையை இப்போதுதானே கேட்டு வந்திருக்கிருேம் ! அந்த ''அரோமா'' பிரபையாக இருக்கும் என்று சமாதானப்படுத்திக் கொண்டு உள்ளே சென்றேன்.

நான் மாடிப்படி ஏறும்பொழுது டாக்டரின் தனி அறையின் சாளரம் சற்றே திறந்திருந்தது. எதேச்சையாக அதன் வழியே நோக்கினேன். ஆயிரம் பேரிடிகள் என் மண்டையைத் தாக்குவது போலத் தோன்றியது. அந்தச் செண்பக மலர்கள் அங்கு எப்படி வந்தன ? அதுவும் அவர் படுக்கையறையில், சிதறலாய் !

மாநாட்டுக்குமுன், பிரதிநிதிகளிடம் அவர் அளவளாவிக் கொண்டிருந்தபோது செண்பக மலர் சூடிக் கொண்டிருந்த ஒரு பெண்ணைப் பார்த்து, 'வெரி நைஸ்' என்று புகழ்ந்து விட்டு டாக்டர் என்னிடம் சொன்னது நினைவுக்கு வந்தது.

''ராஜசேகரன்! எனக்குச் செண்பகப் பூ என்ருல் ரொம்பப் பிடிக்கும். உனக்குத் தெரியுமோ, செண்பகப் பூ என்ருல் முருகனுக்குப் பிடிக்கும் என்பதால் முருகனுக்கே 'செண்பகப் பாண்டியன்' என்று ஒரு பெயரும் உண்டு.''

அந்தச் செண்பகப் பூக்கள் அல்லவா அவர் படுக்கையறையில் சிதறியிருந்தன!

பெங்களூர் அசோகா ஹோட்டல் கான்ஃபரன்ஸ் ஹாலே மௌனத் தவத்தில் ஆழ்ந்து கிடந்தது. காரணம் விஞ்ஞானி



களின் கருத்தரங்கில் டாக்டர் சபேசன் கிளப்பிய ஒரு பிரச்னைதான்.

''இறைவனின் பேராற்றலை யாரும் அளவிட முடியாது. நாம் சாப்பிடும் உணவை உமிழ்நீர் மூலமாகச் சர்க்கரையாக மாற்றி, தொண்டைக் குழாய், உணவுக் குழாய் மூலமாக வயிற்றில் செலுத்தி அதை இரத்தமாக மாற்ற நான்கு மணி ஆகிறது. ஆனால் அதையே செயற்கை முறையில் பத்து விஞ்ஞானிகள் நுண்ணிய இயந்திரங்களின் உதவியுடன் செய்ய நாற்பத்தெட்டு மணி நேரம் பிடித்தது. ஆனால் அந்தச் செயற்கை ரத்தத்தில் ஹெமோக்ளோபின் இல்லை.

''அப்படிப் பார்க்கையில் எத்தகைய நுண்ணிய தொழிற்சாலைகளை இறைவன் நம் உடலில், அதுவும் கோடிக்கணக்கானவர்களின் உடல்களில் அமைத்திருக்கிறான்.

'' 'மெய் ஞானியாகி மிளிர்கின்ற அந்த மெய்ச்சுடர்' என்று மணிவாசகப் பெருமான் கூறும் அவரின் மெய்ஞ்ஞானத்தின் முன் எல்லாம் தெரிந்ததாகப் பறைசாற்றிக் கொள்ளும் விஞ்ஞானிகள் நாம் எம்மாத்திரம் ?''

மனிதனின் பரிணாம வளர்ச்சியைக் கூறி, அவன் மெய்ச்சுடரிலிருந்து தெறித்த ஒரு சின்னஞ் சிறு பொறி தான் என்று கூறினால், அந்த உண்மையைக் கேட்டு ஏன் அந்த விஞ்ஞானிகள் உலகம் மெய்சிலிர்க்காது ? ஆனால் மகாநாட்டுக்கு விசேஷமாக அமர்த்தப்பட்டிருந்த ஹோட்டலில் தங்காது டாக்டர் சபேசன் அவருக்கும் எனக்கும் வேறு ஹோட்டலில் ஏற்பாடு செய்திருந்தார்.

வழக்கம்போல் மாநாட்டுப் பிரதிநிதிகளின் அபிப்பிராயத்தைக் கேட்டுக் கொண்டு நாங்கள் தங்கியிருக்கும் ஹோட்டலை நோக்கி



# மனித தெய்வமா? யார் சொன்னது !



வள்ளலார் - காந்தி விழாவை வழக்கம் போல் சிறப்பாக நடத்தினர் பொள்ளாச்சி திரு நா. மகாலிங்கம். பிறப்பால் இஸ்லாமியரானலும் வள்ளலார்-காந்தியின் கொள்கையை ஏற்று, புலால் மறுத்துவிட்ட நீதிபதி இஸ்மாயில் கூறிய ஒரு கருத்து:

வள்ளலாரும் காந்தியும் அண்மையில் நம் காலத்தில் நம்மிடையே வாழ்ந்தவர்கள். ஆனால் நாம் வெகு சுலபமாக அவர்களைத் தெய்வங்களாக்கி விடுவோம். தெய்வங்களாக்கி, 'அவர்கள் அவதார புருஷர்கள், தெய்வங்கள்; அதனுல் அவர்களால் அவ்வளவு தூய்மையாக வாழ முடிந்தது; நாம் சாமானிய மனிதர்கள்; அந்த நிலையை நாம் எட்ட முடியுமா?' என்று நம்மை நாமே சமாதானப்படுத்திக் கொண்டு மெத்தனமாக இருந்துவிடுவோம்.

இந்த மனப்பான்மை நம்மிடமிருந்து மாற வேண்டும். காந்தியும் வள்ளலாரும் தெய்வங்களல்லர்; நம்மைப் போன்ற மனிதர்களே என்று திரும்பத் திரும்பச் சொல்லிக் கொண்டு அவர்களைப் போன்ற ஒழுக்கமான வாழ்க்கை நடத்த முயல்வோம். அவர்களை மனிதர்களாக எண்ணினுல்தான் அவர்களைப் போன்று நாமும் வாழ முடியும் என்ற உறுதி ஏற்படும்.

xxxxxxxxxx xxxxxxxx xxx

விரைந்தேன். டாக்டரின் அறையைத் தாண்டித்தான் என் அறைக்குப் போக வேண்டும். நான் வந்து விட்டேன் என்பதையும் என் இரவு வணக்கத்தையும் சொல்ல அவர் அறையின் கதவை மெல்லத் தட்டினேன். அறையின் வெளியே சில சம்பங்கிப் பூக்கள் கிடந்தன. பெங்களூரிலா சம்பங்கிப் பூக்களுக்குப் பஞ்சம் என்று நினைத்துக் கொண்டேன்.

கதவைத் திறந்த டாக்டரிடம் முன்பு நான் கண்ட அதே ஒளி. உள்ளே நோட்டம் விட்டேன். படுக்கையில் அதே சம்பங்கி மலர்கள்?

▫ ▫ ▫

புது தில்லியில் ஓர் அனைத்துலக விஞ்ஞானிகள் மகாநாடு. 'விஞ்ஞான பவனி'ல் ஏற்பாடு செய்திருந்தார்கள். பெங்களூரில் டாக்டர் பேசிய பேச்சைத் திட்டிச் சென்னையிலிருந்து ஓர் அரசியல்வாதி எழுதியிருந்தார். ''மேனுட்டு விஞ்ஞானிகள் அம்புலியைத் தொட்டுவிட்டு வரும்போது, நம் ஊர் விஞ்ஞானி திருவாசகம் பேசிக் கொண்டிருந்தால், எத்தனை தலைமுறை எடுத்தாலும் நம் நாட்டுக் குழந்தைகள் ''நிலா, நிலா ஓடி வா, நில்லாமல் ஓடி வா !'' என்றுதான் பாட வேண்டியிருக்கும்'' என்று.

''பரவாயில்லை. நம் ஊர் அரசியல்வாதிகள் தான் தாங்கள் இறைவனைவிட ஆற்றல் மிக்கவர்கள் என்று சொல்லிக் கொள்பவர்கள் ஆயிற்றே !'' என்று சமாதானமாகச் சொன்னேன். இருந்தாலும் டாக்டர் சபேசன் அன்றைய விழாவில் பேச்சின்போது அதுபற்றி ஏதேனும் சொல்லுவார் என்று நினைத்தேன். ஏமாந்தேன். ஆனல் ஆங்கில நாட்டு விஞ்ஞானி ஒருவர் சபேசனின் ஆலோசனையைக் கேட்டபோது எல்லோருக்குமே ஆச்சரியமாகவும் பெருமையாகவும் இருந்தது.

''இல்வாழ்வுத் துறையில் ஈடுபடுவதற்கும், மனிதனின் முகத்தில் ரோமங்கள் வளர்வதற்கும் உள்ள சம்பந்தத்தை ஆராய முற்பட்டேன். குடும்பத்தினருடன் தங்கி யிருக்கும் நாட்களிலும், குடும்பத்தைவிட்டு வெளியூரில் தனியே இருக்கும் நாட்களிலும் ரோமங்களின் வளர்ச்சி முகத்தில் எப்படிப் பாதிக்கப்படுகிறது என்பதற்காகச் சில 'டிராவலிங் சேல்ஸ்மென்'களை ஆராய்ந்தேன். படையினரிடமும் ஆராய்ச்சி செய்தேன். இம் மாதிரி ஆராய்ந்து பார்க்கையில் என்னுடைய கூற்றுக்கும் நடைமுறைக்கும் காரண காரிய சம்பந்தம் இருக்குமோ என்ற சம்சயம் உண்டாகிறது. இது குறித்து டாக்டர் சபேசனின் ஆலோசனையையும் கேட்க விரும்புகிறேன்.''

அந்த 'விஞ்ஞான பவனே' டாக்டர் சபேசனின் பக்கமாகத் திரும்பியது.

''இல்வாழ்வில் ஈடுபட்டிருப்பவர்கள், ஈடுபடாதிருப்பவர்கள் என்பதைவிட, மேலான ஒரு நிலையை நான் யோசித்துப் பார்த்தது உண்டு. தெய்வங்களின் உருவங்களை நாம் சித்திரமாகப் பார்க்கிறோம். அது உண்மையா, பொய்யா என்ற வாதத்தில் நான் இறங்க விரும்பவில்லை. ஆனல் வரலாற்றுக் காலத்தில் வாழ்ந்திருந்த மகான் புத்தர், சங்கரர், இராமானுஜர், விவேகானந்தர் இவர்கள் முகத் தோற்றத்தைப் பார்க்கும் போதெல்லாம் இவர்கள் எல்லோருக்குமே, 'வழித்துவிட்டாற் போல் 'முகம் பிரகாசமா யிருக்கிறதே ! ரோமத்தின் சாயலையே முகத்தில் காணுமே' என்று சந்தேகத்துடன் பார்த்ததுண்டு. அதை ஜடா மகுடதாரிகளாக, மனைவி மக்களுடன் வாழ்ந்த புராதன ரிஷிகளின் முகத் தோற்றத்துடன் ஒப்பிட்டுப் பார்க்கும் போது, இவர்களுடைய தோற்றப் பொலிவுக்குக் காரணம் பிரம்மச்சரிய விரதமேதான் என்ற முடிவுக்கு வரத் தோன்றுகிறது. அந்த வகையில் ஆங்கில நாட்டு விஞ்ஞானிக்கு என் பாராட்டுதல்கள் உரியன'' என்று கூறி முடித்தார்.

▫ ▫ ▫

எனக்கு எரிச்சல் பற்றிக் கொண்டு வந்தது.

இன்றைக்கு இவரைக் கையும் களவுமாகப் பிடித்துவிட வேண்டும்' என்று எண்ணினேன். 'மாநாட்டுப் பிரதிநிதிகளின் அபிப்பிராயத்தைக் கேட்டுக் கொண்டு வருவதற்குள் இவர் தப்பி விடுகிருர். இன்று இவர் உண்மையில் எப்படி இருக்கிருர் என்பதைப் பார்த்துவிட வேண்டும்' என்று நினைத்துக் கொண்டேன். என் நண்பர் ஒருவரின் வீட்டில் சாப்பிட ஒப்புக் கொண்டுள்ளதாகக் கூறி, அவரை முன்னே போக விட்டேன்.

சற்று நேரம் கழித்து டாக்டருக்காக ஒதுக்கியிருந்த ஹோட்டல் அறைக்குச் சென்றேன். நாளைய கருத்தரங்குக்குத் தேவையான சில

புதிய

# உடனடி-உபயோக

# டிக்-20

உடனடியாக மூட்டைப்பூச்சிகளை ஒழிக்கிறது



மண்ணெண்ணை
கலப்பதற்கான
மேற்படி செலவு
கிடையாது!




கலக்க வேண்டிய தொல்லை கிடையாது. திறந்து நேராக உபயோகிக்க வேண்டியதுதான். உடனடியாக மூட்டைப் பூச்சிகளை ஒழிக்கிறது. பிளவுகள், பொந்துகள், மெத்தைத் தையற்குழிகள். பர்னிச்சர் ஜாயிண்ட்டுகள், சுவர்களிலுள்ள சட்டங்களின் அடி பாகங்கள் போன்ற பல இடங்களிலும் புதிய டிக்-20 உபயோகியுங்கள்.

புதிய டிக்-20 இப்போது அதிக பாதுகாப்பானது. வீட்டில வைக்கலாம். காரணம் அது மீண்டும் புதுப்பிக்கப் பட்ட பாமுலா கொண்டதாகும். முன் கூட்டியே மண்ணெண்ணை கலக்கப்பட்டு உடனடியாக உபயோகிக்க வசதியாக தயாரிக்கப்பட்டுள்ளது. சர்க்காரின் புதிய நிர்ணயங்கள்படி உள்ளது. உபயோகிப்போரின் பாதுகாப்பை உறுதி செய்கிறது.

**இன்றே டிக்-20 வாங்குங்கள்**
**இன்றிரவே நன்றாக உறங்குங்கள்.**



ஒரு ராலிஸ் இந்தியா தயாரிப்பு

RADEUS/R/T-2

குறிப்புக்கள் என்னிடம் தங்கி விட்டதாகவும் அதை அவரிடம் ஒப்படைக்க வந்திருப்பதாகவும் ஒரு சமாதானத்தை மனத்துக்குள்ளேயே நூறு முறை சொல்லிப் பார்த்துக் கொண்டேன். அறையின் வாசலிலோ வெளியிலோ 'பூக்கள்' ஏதும் இல்லை. என் மனத்துக்குள்ளேயே, ''அப்பாடா, அப்படி ஒன்றும் இல்லை'' என்ற ஆறுதல். அதே சமயம் தவறுகக் கணக்குப் போட்டுவிட்டோமோ என்ற குற்ற உணர்ச்சி வேறு.

அறை திறக்கப்பட்டது. திறந்தவள் ஒரு பூங்கொடி. அறையின் உள்ளே டாக்டர் அமர்ந்திருந்தார். அவர் முகத்தில் அதே ஒளி, அதே 'அரோமா'. அவனிடம் ஒரு தயக்கம்.

''என்ன வேண்டும்? மோடாவைப் போட்டுக் கொண்டு உட்கார்'' என்று என்னிடம் கரிசனமாகக் கூறினர். மதனு என்று அவளை எனக்கு அறிமுகப்படுத்தினர்.

''இவர்தான் மிஸ்டர் ராஜசேகரன். இவர் விஞ்ஞானத் துறையில் எவ்வளவோ சாதிக்கலாம். இருந்தாலும் என்னைக் கட்டிக்கொண்டு அழுகிருர். என் வாழ்க்கை வரலாற்றை எழுதுவதாக ஆரம்பித்து என் அந்தரங்கக் காரியதரிசியாகவே ஆகி விட்டார். இவரைப் பற்றி நான் ஓர் ஏற்பாடு செய்து வைத்திருக்கிறேன். இட் இஸ் ஏ மிஸ்டரி'' என்று சொல்லிவிட்டு, ''விருந்துக்குப் போகவில்லையா?'' என்று கேட்டார் என்னை.

அறையின் வாசலில் நிழலாடியது. மதனு வெளியே சென்ருள்.

''போக வேண்டும். நாளைய கருத்தரங்குக்குத் தேவையான குறிப்புக்கள் என்னிடம் தங்கி விட்டன. அதைக் கொடுத்துவிட்டுப் போகலாம் என்றுதான் வந்தேன். வந்த இடத்தில் இந்த மாதிரி.....''

''ஏன் இழுக்கிருய் ராஜசேகரன். நீயும் ஒரு விஞ்ஞானி என்பதை மறந்துவிடாதே. சந்தேகத்தை அப்படியே சம்சயமாக வைத்திருப்பவன் சாமானியன். அதன் காரண காரியங்களை விண்டு ஆராய்பவன் விஞ்ஞானி.''

''அப்படியாளுல் மதுரையில் தங்கள் வீட்டில் படுக்கையறையில் பார்த்த சண்பக மலர்கள், பெங்களூரில் ஹோட்டல் அறையில் பார்த்த சம்பங்கி மலர்கள், இப்போது இங்கே—''

''எல்லாமே பொருள் ஒன்றுதான்...... மாமேதை ஹக்ஸ்லி சொன்னர். 'மேதை என்பவன் கழுகைப்போல் உயர, உயர வட்டமிடும் பருந்தாக இருக்கக் கூடாது. அவ்வப்போது பூமியில் இறங்கி அதன் தன்மையை ஆராயும் 'ஆஸ்ட்ரிச்' பறவையாக இருக்க வேண்டும்' என்று. அது மாதிரி தான் ஞானியும். அவனுக்கும் அவன் வாழும் பூமிக்கும் 'டச்' இருந்து கொண்டேயிருக்க வேண்டும்.

''மின்னலில் மின்சாரம் என்றைக்கும்தான் இருக்கிறது. அது 'மார்க்கோனி'யின் வீட்டுச் சாளரத்தில் உள்ள கம்பியின் மூலமாக, 'எர்த்தாகி'க் கீழே கிடந்த இறந்த தவளையை உலுக்கிவிட்ட போதுதான் மின்சாரத்தின் உண்மை உலகுக்குத் தெரிந்தது. மின்சாரத்துக்கு 'எர்த்' எவ்வளவு தேவையோ, அவ்வளவு விஞ்ஞானிக்கும் அவன் வாழும் அன்றாட உலகுடன் தொடர்பு இருக்க வேண்டும்.''

''ஒப்புக் கொள்கிறேன். இருந்தாலும் உங்கள் வயதுக்கும், பெயருக்கும், உலகம் ஒப்புக் கொள்ளுமா ?''

''ஒப்புக் கொள்ளாதுதான். அதனுல் தானே நான் மறுமணமே செய்து கொள்ளவில்லை ? என் மனைவி இறக்கும் போது என் மகள் மதனுவுக்கு ஆறு வயது. நான் மறுமணம் செய்து கொண்டால் அவள் வாழ்வு என் வாழ்வு இரண்டுமே நரகமாகிவிடும் என்றுதான் மறுமணம் செய்து கொள்ளவில்லை. என் மகள் சென்னையில் மருத்துவத் துறையில் டாக்டர் பட்டம் பெற்றுவிட்டாள். இனி அவளுடனேயே தங்கி விடுவதாக உத்தேசம். அவளுக்குச் செண்பகம், சம்பங்கி என்றால் உயிர்.''

''அப்படியானல் இந்த ராஜசேகரனுக்கு இனி வேலை இல்லை என்று சொல்லுங்கள்!'' எனக்கு என் கவலை. வேலைக் கவலை !

''அதென்ன, அப்படிச் சொல்லிவிட்டாய்? நான் என் மகளுடன் தங்கப் போகிறேன். நீ என்னுடன் தங்கப் போகிறாய். அப்போது ஊர் உலகம் ஒன்று சொல்லக் கூடாது, பார்! அதற்கு ஓர் உறவு வேண்டுமே ! ஏ சிம்பிள் சலுஷேன்!''

நான் வானத்தை நோக்கினேன். அம்புலியில் உள்ள கறுப்பு அதன் அழகை மெருகு ஊட்டுவதாகவே தெரிந்தது.



திண்டிவனம் வட்டம், புளிச்சம்பள்ளம் என்னும் ஊரில் ஆனந்தவல்லி சமேதராக ஸ்ரீசுந்தர ஜோதீசுவரர் குடிகொண்டுள்ளார். அவரது பழம் பெரும் ஆலயம் பழுதுபட்டிருக்கிறது. அதைப் புதுப்பித்து நவக்கிரக சந்நிதியும் அமைக்க ஏறக்குறைய ஐம்பதினாயிரம் ரூபாய் செலவாகலாம் என்று மதிப்பிடப்பட்டிருக்கிறது. இந்தப் புனிதத் திருப்பணியில் பங்கு கொள்ள விரும்புபவர்கள் தொடர்பு கொள்ள வேண்டிய முகவரி: ஸ்ரீ டி. அ. சுப்பிரமணிய சிவாச்சாரியார், செயலாளர் - பொருளாளர், ஸ்ரீஆனந்தவல்லி சுந்தரஜோதீசுவர ஆலயத் திருப்பணிக் குழு, புளிச்சம்பள்ளம், திண்டிவனம் வட்டம், தென் ஆர்க்காடு மாவட்டம்.

**சர்வர்:** சார், இட்லிக்குச் சாம்பார் வேணுமா, சட்னி வேணுமா ?

**வந்தவர்:** இரண்டுக்கும் என்ன வித்தியாசம் ?

**சர்வர்:** மூன்று நாள் !

— சம்பத்குமாரி



# குவாலியர் ரேயானின் மகத்தான 26 ஆண்டு காலப் பணி



## தன்வலிமை பெறும் கனவை நனவாக்கி வரும் பணி.

ரேயான் துணிகள், ஸ்டேபிள் இழை, ரேயான்-கிரேடு பல்ப் (கூழ்), ரேயான் ஸ்டேபிள் நூலிழைத் தொழிற்சாலைகளுக்கான எந்திர சாதனங்கள் ஆகிய எல்லாவற்றையும் நம் நாட்டிலேயே உற்பத்தி செய்து கொள்வதற்கென குவாலியர் ரேயான் செய்துவரும் முயற்சிகள், நாடு சுதந்திரம் எய்திய நாளிலேயே தொடங்கிவிட்டன.

மூங்கில் மற்றும் இதர கெட்டி மரங்களிலிருந்து கரை திறனுள்ள ரேயான்-ரகக் கூழ் தயாரிப்பு, மற்றும் ரேயான், பல்ப், இவை சார்ந்த தொழிற்சாலைகள் ஆகியவற்றுக்கான நுட்பநவீனமான எந்திர சாதனங்களின் உற்பத்தி முதலியவற்றிலே குவாலியர் ரேயான் முன்னோடியாக விளங்குவதனால், ரேயான் தொழிலிலே நம் நாடு தன்வலிமை பெற வழியமைத்துள்ளது.

இன்று, குவாலியர் ரேயானின் ஸ்டேபிள் நூலிழை உற்பத்தியளவு, 520 லட்சம் பேருக்கு ஆடை வழங்கப் போதுமானதாக உள்ளது. மரக் கூழ் உற்பத்தியோ, ஆண்டு தோறும் ஒரு லட்சம் டன்களுக்கு மேல்; இது செல்லுலோஸ் இழையளவிலே கணக்கிட்டால், 5.2 லட்சம் பருத்தி பேல்களுக்கு ஈடாகும்.

கடந்த பத்தாண்டுகளில், குவாலியர் ரேயான் நம் நாட்டின் பொக்கிஷத்திற்கு, வரிகளும் தீர்வைகளுமாக ரூ. 90 கோடி செலுத்தியுள்ளதோடு, அதே காலத்தில் ரூ. 360 கோடி அந்நியச் செலாவணியை மிச்சப்படுத்தியுள்ளது; இதை நோக்கும்போது, தன்வலிமை வாய்ந்த பொருளாதார அமைப்புக்கு குவாலியர் ரேயான் செலுத்திவரும் மகத்தான பணியின் பெருமை தெளிவாக விளங்கும்.

**குவாலியர் ரேயான்—**

**தேச முன்னேற்றமே முதன்மை எனக் கருதுவோர்.**

தி குவாலியர் ரேயான் ஸில்க் மானுபாக் (வீவிங்.) கோ. லிட்., பிர்லாகிராம், நாக்தா (ம.பி.)

Sobhagya GR 74-2-Tam.

# ஹோல்டாண் சில பேர் சிரிக்கலாம்!

வட்டமேஜை



☐ விஜயா பாலகிருஷ்ணனின் கல்லூரிக் கதை (ஏ) 1. நல்ல நகைச்சுவை! ''ஹோல்ட் ஆன்! ஓர் ஆள் இறங்கணும்!'' என்ற வாக்கியங்களைப் படித்ததும் சிரியோ சிரி என்று சிரித்து மகிழ்ந்தேன். நல்ல வேளை! நான் கல்லூரியில் நுழையவில்லை! உயர்நிலைப் பள்ளியோடு சரி. இவ்வளவு சொன்ன பிறகு உண்மையைச் சொல்லிவிட வேண்டியது தான். அங்கு ஆசிரியரைக் கேலி பண்ணியது வாஸ்தவம். (ஒரு ரகசியம்: அதன் பலன், எஸ்.எஸ்.எல்.சி. கோட்; பள்ளிக்கு முழுக்கு)

திருவாரூர்
15–10–76 வெ. சுப்புராமன்

☐ ''ஒரு நூலகம் திறப்பது நூறு சிறைச் சாலைகளை மூடுவதற்குச் சமம்'' என்றான் பேரறிஞன் எலியட்.

ஆனால், பழவந்தாங்கல் பகுதியிலுள்ள நூலகத்தில், மாலை 6–30க்கு மேல் மின்சார விளக்கு எரிவதில்லை. இதனால் நூலகம் மூடப் படுகிறது. காரணம் கேட்டதற்கு, நூலகக் கட்டிடம், ஆலந்தூர் நகராட்சிக்கு உரியதாம். கட்டிடத்தில் உள்ள நூலகம் சென்னை மாவட்ட நூலக ஆணைக் குழுவைச் சேர்ந்ததாம். அதனால் மின்சாரக் கட்டணம் யார் கட்டுவது? நகர சபையா? நூலக ஆணைக் குழுவா? என்பது பிரச்னை. இதன் விளைவு மின்சார இலாகா, கடந்த 2–4–76ல் மின் இணைப்பைத் துண்டித்து விட்டார்கள். யாரும் மாலையில் படிக்க முடிவதில்லை.

சென்னை–61
18–10–76 எம். எஸ். தியாகராஜன்

☐ பக்தர்கள் உய்யப் பாதயாத்திரை மேற்கொண்ட வைணவ மதத் தலைவரான ஸ்ரீமத் ஆண்டவன் ஸ்வாமிகளின் படம் ஓர் அரிய பொக்கிஷமாக உள்ளது. ஸ்ரீமத் ஆண்டவனுடைய பாத யாத்திரையைப் பற்றிய கட்டுரையைப் படித்ததும் எங்கள் குடும்பத்தினரின் கண்கள் பனித்தன.

சேரன்குளம்
15–10–76 டி. மைதிலி

☐ தங்களிடம் சொல்லி ஒரு குரல் அழுது என் வயிற்றெரிச்சலைக் குறைத்துக்கொள்ள நினைக்கிறேன்.

தியேட்டருக்குப் படம் பார்க்க மாட்னி ஷோவுக்கு நானும் என் மனைவியும் போனோம். பெண்கள் டிக்கட் சீக்கிரம் கிடைக்கும் என்று என் மனைவி 1–30 மணியிலிருந்து க்யூவில் நின்றாள். டிக்கட் கிடைத்தது. எப்பொழுது தெரியுமா? 2-45 மணிக்குத்தான் டிக்கெட் கொடுக்கவே ஆரம்பித்தார்கள். மூன்று மணிக்கு உள்ளே போனோம்.

ஏ. ஸி. தான் கிடையாது. பவர் கட். மின்விசிறியாவது போடக் கூடாது? அதுவும் கிடையாது. மக்கள் பட்ட அவதி! அனுபவித்தால்தான் தெரியும். ஆரோக்கியத்துக்கு எவ்வளவு கேடு! காசைக் கொடுத்துத் தேளையும் கொட்டிக் கொண்ட கதைதான்!.

சென்னை–91
7–10–76 சீனு

☐ '' அப்படியா !'' என்ற சென்ற வாரத் துணுக்கொன்றில் 'வெனீஷியன் பிளைண்ட்' என்னும் ஜன்னல் திரைகளை வெனிஸ் நகரில் 'பெர்ஷியன் பிளைண்ட்' என்கிறார்கள் என்று படித்தேன்.

அவ்வாறே லீவு லெட்டர் எதுவும் கொடுக்காமல், சொல்லாமல் கொள்ளாமல் மட்டம் அடிப்பதை 'பிரெஞ்சு லீவு' என்கிறோம் அல்லவா?

அந்த மாதிரி மட்டம் அடிப்பதை ஃப்ரெஞ்சில் 'ஆங்கில விடுப்பு' என்கிறார்கள் !

சென்னை-33
14-10-76 எல். என். கல்பகம்




விமான விபத்தில் பாழான தபால் கார்டின் மறு புறத்தில், 'போடு புதிர்' பகுதியில் தண்டவாளத்தின் படமும், ஜூப் லைன் படமும் சரியாகப் போடப் படவில்லை என்று குறைப்பட்டுக் கொண்டிருக்கிறார் ஸ்ரீமதி ஜோதி.

# கோத்ரெஜ் ஸ்டோர்வெல்



விசேஷ லாக்கர் டிஸைன்
கூடுதல் பாதுகாப்பளிக்கிறது.



**ஸ்டோர்வெல் மைனர்**
—லாக்கருடன் அல்லது
லாக்கர் இன்றி.

## புதிய 'காம்பேக்ட்' வகைகள்



ஸ்டாண்டர்ட் ஸ்டோர்வெல்லைப்
போன்றே அதே உள் அகலம்.
அதே ஸ்டோர்வெல் தரச்
சிறப்புடன், தேர்ந்தெடுக்க ஆறு
டிஸைன்கள். ஆயினும் உயரத்-
திலும் அகலத்திலும் கொஞ்சம்
குறைவு—இடவசதி, பணவசதி
குறைந்த இல்லங்களுக்கு உகந்தது.



**புதிய ஸ்டோர்வெல் 'வார்ட்ரோப்'**
ஸ்டாண்டர்ட் அளவைவிட, கூடுதல்
அகலம் மற்றும் உள் அகலம். எனவே
கூடுதல் இடவசதி. ஆகவே ஆடைகள்
மடிப்பு குலையாது. உள்ளமைந்த
லாக்கர் மற்றும் அட்ஜஸ்ட்
செய்யக்கூடிய ஷெல்ப்புகள்.

நான்கு ஷெல்ப்புகள் கொண்ட ஸ்டோர்வெல் இப்போது மத்திய அரசு அலுவலகங்களுக்கு

# இந்த ஸ்டீல் கப்போர்ட்கள் போலவே தயாரித்தளிக்க மற்றவர்கள் மிகவும் முயன்று கொண்டிருக்கிறார்கள்.

பல ஆண்டுகளாக கோத்ரெஜ் மிகச் சிறந்த ஸ்டீல் கப்போர்ட்களைத் தயாரித்தளித்து வருகிறது. உதாரணமாக, ஸ்டாண்டர்ட் ஸ்டோர்வெல் 6 வகைகள், ஸ்டோர்வெல் மைனர் 2 வகைகள், மேலும் சமீபத்தில் வெளிவந்துள்ள காம்பேக்ட் ஸ்டோர்வெல் வகைகள். அத்துடன் இவை அனைத்திலும் அதிக இடவசதி கொண்ட, புதுமைச் சிறப்புகள் அமைந்த ஸ்டோர்வெல் வார்ட்ரோப்.

காலங்காலமாக, கோத்ரெஜ் தரம், மற்றும் டிஸைன்களையே பின்பற்றி மற்றவர்களும் தயாரிக்க முயன்று வருகின்றனர். ஆயினும் இந்தத் துறையில் நாங்களே முன்னணியில் நிற்கிறோம். காரணம் எங்களின் கடும் முயற்சிகள். எங்களின் இம் முயற்சிகளினால் உங்களுக்கு ஈடிணையற்ற ஸ்டோர்வெல் கிடைக்க வழி ஏற்படுகிறது.

உண்மையில் அன்று முதல் இன்று வரை உள்ள நிலை இது.

நாங்கள் ஸ்டோர்வெல்லை உட்புற உறுதி மிக்கதாய்த் தயாரிக்கத் தொடங்கினோம். அதன் பளபளப்பான மேற்புறப் பெயிண்ட் பூச்சுக்கு அடியில் உள்ள, துருப்பிடிக்காத பகுதி ஆண்டுக் கணக்கில் உழைக்கிறது.



ஸ்டோர்வெல் மாடல் 1
—வெளிகாட்டுக் கண்ணாடி அமைந்த ஆளுயரக் கண்ணாடி—
முழு உருவம் பார்க்கும் வசதி.

நாங்கள் நவீன பாணியில், மும்முனைத் தாழ் (போல்ட்டிங்), அமைப்பு மூலம் கூடுதல் பாதுகாப்புத் திறன் கொடுத்துத் தகர்க்க முடியாத கோத்ரெஜ் பூட்டை இணைத்தோம்.

இன்னும் பல புதுமைகளை நாங்கள் புகுத்தினோம் : வெளிக்குத் தெரியாத, விசேஷ 'சானல் கிரிப்' லாக்கர்கள், தகர்க்க முடியாத கதவுக் கீல்கள் மற்றும் குழைவளைவான விளிம்புகள்.

ஒவ்வொரு முறை புதுமை ஒன்றை நாங்கள் புகுத்தும்போதும், அதனை மற்றவர்களும் பின்பற்றத் தொடங்கினர்.

ஆயினும் மற்றவர்கள் எளிதாகப் பின்பற்ற முடியாத சிறப்புகளும் இருக்கின்றன.

தரச் சோதனை—தயாரிப்பின் ஒவ்வொரு கட்டத்திலும் நூற்றுக்கு நூறு பரிசோதனை.

நவீனப்படுத்தும் முயற்சிகளை மேற்கொள்ள கோத்ரெஜிற்கு இருக்கும் அபரிமிதமான வசதிகள்.

மேலும் அபிவிருத்தி அம்சங்களுக்குப் பின்பலமாக உள்ள தனிப்பட்ட ஆராய்ச்சி நிலையம்.

இன்னும் சொல்லப் போனால், தரச் சிறப்பு என்று வருகிறபோது எங்களுக்கு நாங்களேதான் மிகப் பெரும் போட்டியாளர்கள்!

## இலவசம்!

**கோத்ரெஜ் ஸ்டோர்வெல் விவர வெளியீட்டுக்கு**
இம் முகவரிக்கு எழுதவும்:
**கோத்ரெஜ் அண்ட் பாய்ஸ் மா. கம். பிரை. லிட்.**
4 ஏ, ஹோம் ஸ்ட்ரீட், போர்ட்,
பம்பாய்-400 001

**உன்னதமான தயாரிப்புகளுக்கு ஒப்பற்றது — கோத்ரெஜ்**

'டி.ஜி.எஸ். அண்ட் டி.' ரேட் காண்ட்ராக்டில் கிடைக்கிறது.

U/GS/16/6A TAM



# இனிமையான ஒரு மாலைப் பொழுதும் இருட்டான ஒரு நிகழ்ச்சியும்!



விமலாரமணி

அவனுக்குச் சுவாரசியம் குறைந்துவிட்டது! பொழுது போகாமல் ஒரு கடை வாசலில் நின்று கொண்டு சிகரெட் புகைத்துக் கொண்டிருந்த அவனுக்கு எதிர்காலம் இருட்டாக இருந்தது. அவன் நம்பி இருந்த வேலை போய் விட்டது. அவன் நம்பியிருந்த 'கேர்ல் பிரண்ட்ஸ்' எல்லாம் அவன் நிலையைப் புரிந்து கொண்டு மெல்ல மெல்ல விலகிவிட்டார்கள்.

அவன் அழகும், அவன் மிக நாசூக்காக நடந்து கொள்கிற விதங்களும் இன்னும் எத்தனை நாட்களுக்குத் தாக்குப் பிடிக்க முடியும்? அவனைப் புரிந்து கொண்ட பலர் விலகி விட்டார்கள். அவனைப் புரிந்து கொள்ளாத பலர் இன்னும் இவனுக்குப் புரியாதவர்களாக இருந்தார்கள். பாங்கில் இருக்கும் கொஞ்சப் பணம்.... இன்னும் எத்தனை நாட்களுக்கு? இந்த மாதிரி 'டபுள்நிட்' பேண்டுகளை 'டிரை வாஷு'க்குத் தரவே அவனுக்கு நூறு ரூபாய்க்கு மேல் செலவாகுமே?

திடீரென்று எதிர்க் கடையில் புடவைகளை அலசிக் கொண்டிருந்த ஒருத்தியின் பின்புறம் தெரிந்தது. 'கச்சிதம்' — மனத்துக்குள் சொல்லிக் கொண்டான். அவன் மெல்ல நடந்தபடி அந்தக் கடையின் ஒவ்வொரு 'ரேக்காக'ப் பார்த்தபடி நகர்ந்து கொண்டிருந்தான்..... 'ஒயில் நடை' — என்று 'சர்டிபிகேட்' தந்தான் அவன் இங்கிருந்தபடியே.... புடவையை வாங்கிக் கொண்டு கவுண்டரில் அவள் பில்லை வாங்கியபடி ஹேண்ட் பேக்கைத் திறந்து பணம் எடுத்த விதம் அழகாக இருந்தது. கவுண்டரில் அவள் தன் கரங்களை நீட்டிப் பணத்தைத் தந்தபோது அவளின் 'ப்ரொஃபைலில்', கூர்மையான நாசி, அங்க வளைவுகள் அனைத்துமே எடுப்பாகத் தெரிந்தன. வாளிப்பான கரங்கள் வெண் சங்கு போல் அழகாக நீண்டு மடங்கின. அவள் புடவைப் பார்சலுடன் கடையிலிருந்து இறங்கினாள். தெரு விளக்கின் ஒளி அவள் முகத்தில் பட்டது.

அவன் திடுக்கிட்டான்!

அவள்.... அவள்....?

நெற்றி வெறுமையாக இருந்தது. கழுத்து மூளியாக இருந்தது. அவனுக்குச் சுவாரசியம் குறைந்துவிட்டது! ஆனால்... அவள் ஏறிச் சென்ற அந்தப் பெரிய காரைப் பார்த்ததும்? சுவாரசியம் 'கிறுகிறு' என்று ஏறியது..... அவனையும் அறியாமலே.! விதவையா? பரவாயில்லை! அவளுக்கு நான் தேவை! எனக்கு அவள் பணம் தேவை.... கார் நம்பரை ஒரு முறை மனத்துக்குள் சொல்லிப் பார்த்துக் கொண்டான்....

▫ ▫ ▫

அந்தப் பிரும்மாண்டமான வீட்டைப் பார்த்தபடி ஒரு கணம் திகைத்து நின்றான்.

முன்னேற்பாடாகப் புடவைக் கடையின் சொந்தக்காரனை தன் நண்பன் ஒருவனிடம் சொல்லிச் சில புடவைகளை எடுத்து ஒரு பெட்டியில் போட்டுக் கொண்டு 'சேல்ஸ்மேன்' மாதிரி வேஷம் போட்டுக் கொண்டிருந்தான். 'ட்ரிம்மாக' இருந்த தன் மீதே தனக்கு ஒரு காதல் பிறந்ததை எண்ணித் தனக்குள் சிரித்துக் கொண்டான். பெண்களிடம் எப்படிப் பழகுவது, எப்படி நாசூக்காக நடந்து கொள்வது, எப்படி அவர்களைக் கவருவது — என்பதெல்லாம் அவனுக்குக் கைவந்த கலை! 'காலிங் பெல்லின்' இனிமையான சங்கீத ரீங்காரம்! தன் எதிர்காலம் 'டூயட்' பாடுவதைப் போல் இருந்தது. கதவு திறந்தது...

"யார்?" — அவள்தான். இனிமையான குரல். வெள்ளைப் புடவையில், அவள் ஒரு தேவதை போல் தோன்றினாள்.

"யார் நீங்கள்? என்ன வேண்டும்?"

முன்னேற்பாடாகத் தான் அடித்து வைத்திருந்த 'விசிட்டிங் கார்டை'த் தந்தான். பத்து ரூபாய் தண்டம்! பரவாயில்லை....ஒரு பெண்ணின் அன்பைப் பெற இது ஒன்றும் அத்தனை பெரிதல்ல!

"புடவைகளா? நோ... ஸாரி... போன வாரம்தான் இரண்டு மூன்று புடவைகள் எடுத்துவிட்டேன். இப்போது வேண்டாம்."

"அப்படிச் சொல்லக் கூடாது. எங்கள் கடையின் புடவைகளைப் பாருங்கள்.... தேவையில்லை என்று நீங்கள் நினைத்தால் கூடப் புடவைகளைப் பார்த்தால் அவைகளைக் கட்டிக் கொள்ள வேண்டும் என்று தோன்றாமல் போகாது..... ப்ளீஸ்...." — உள்ளே போக இருந்தவள் ஒரு கணம் தயங்கினாள்....

அவன் புன்சிரிப்பும், அளவான பேச்சும், வினயமாக மற்றொரு 'ப்ளீஸு'ம் அவளைத் திரும்ப வைத்தன.

"ஓ. கே.... வேண்டாம் என்று சொன்னால் கோபித்துக் கொள்ளக் கூடாது...."

அவன் மகிழ்ச்சியுடன் பெட்டியைத் திறந்தபடி சொன்னான். "நிச்சயமாக மாட்டேன். ஐ யேம் ஏ சேல்ஸ்மேன்.... நான் தோல்விகளைப் பற்றிக் கவலைப் படமாட்டேன்....."

அழகான புடவைகள்! கண்களில் எந்தவித பாவமும் இன்றி அவள் அவைகளைப் பார்த்தாள்.... ''நோ... தேங்க்ஸ்....இதில் எதுவுமே எனக்குப் பிடிக்கவில்லை!''

அவன் கண்களில் ஏமாற்றம் படர்ந்தது.... ''எதுவுமே பிடிக்கவில்லையா ?''

''அப்கோர்ஸ் பிடித்திருக்கிறது.... ஆனால் இந்த மாதிரி புடவைகளை நான் கட்டுவதில்லை.... சிம்பிளாக வெள்ளைக்கலரில் 'ப்ரண்டட் சாரீஸ்'தான் நான் கட்டுவது.''

அவன் புரிந்து கொண்டான். அவனுடைய நடிப்புக்கு ஒரு நிலைக்களத்தை அவள் உருவாக்கித் தந்து விட்டாள்.... இனி அவன் புகுந்து விளையாடிவிட மாட்டானா? ரொம்பப் பரிதாபமாக, அப்பாவித்தனமாகக் கேட்டான்...''ஏன் அப்படி? வெள்ளைக் கலரில்தான் புடவை கட்டுவது என்று ஏதாவது விரதமா ?''

அவள் ஒரு நிமிடம் பேசவில்லை.

அவன் சற்றுத் தயங்கினான்.

''நான் கேட்டது தப்பிதமாக இருந்தால் மன்னியுங்கள்....''

''நோ... தப்பில்லை.... அது விரதமா? இல்லை தவமா? எனக்கே தெரியவில்லை.''

'' ஏன் ?''

அவள் கண்களில் கண்ணீர் நிரம்பியது....

'' என் கணவர் இறந்ததிலிருந்து இப்படித்தான் இருக்கிறேன்.''

அவன் ஒரு நிமிடம் திகைத்தவன் போல் செயலற்று இருந்தான்...

'' உங்கள் கணவர்.... இறந்த...நீங்கள்...நீங்கள்.. ஓ! ஐயேம் ஸாரி..... நான், நீங்கள் குளித்து விட்டு அப்படியே அவசரமாக நெற்றிக்கு இட்டுக் கொள்ளாமல்... ஸாரி... நான்..... தப்பு.... இல்லை வருகிறேன்.....''

ரொம்ப நேரம் கழித்துத்தான் வாசல் கதவு சாத்தப்படுவதை அவன் கவனித்தான். ''என்னடா.... யாருக்கோ புடவை காட்ட வேண்டும் என்று ஐந்தாறு புடவைகள் வாங்கிக் கொண்டு போனாய்..... அப்படியே திருப்பித் தந்து விட்டாயே! ஒன்றும் பிடிக்கவில்லையா ?'' — என்றான் நண்பன்.

'பிடித்திருக்கிறது... இப்போதுதான் சூடு பிடித்திருக்கிறது' என்று தனக்குள் சொல்லிக் கொண்டான் அவன்.

ஒரு வாரம் கழித்து அவளுக்கு 'போன்' செய்தான்..... அவள்தான் பேசினாள்..... தன்னை அறிமுகப்படுத்திக் கொண்ட



**அட்டைப்பட விளக்கம்:**

## மணியான கலையில் தணியாத ஆர்வம்



மணிகளைக் கோத்து மணிபர்ஸ் செய்வது என்பது ஓர் அரிய கலை. ஆர்வம் மட்டும் இருந்தால் போதாது. அசாதாரணப் பொறுமையும் வேண்டும். பிளாஸ்டிக் மணிகளையும் பிளாஸ்டிக்நூலையும் ஆசைப்பட்டுக் காசு கொடுத்து வாங்கிவிட்டுப் பிறகு ஒரு பர்ஸோ கூடையோ அல்லது ஒரு பொம்மையோ எதுவும் முழுசாகச் செய்யாமல் மூலையில் தூங்க விடுவார்கள் பல பெண்கள்.

ஆனால் இவ்விதழ் மேலட்டையில் காட்சி தரும் பெண்மணியோ மணிபர்ஸ், கூடை மட்டுமின்றிப் பலவித அழகிய பொம்மைகளையும் அபாரமான கலை உணர்வுடன் செய்து குவித்திருக்கிறார். அத்தனை பொருள்கள் தயாரித்தாலும் ஏழுமலையான் வடிவத்தை உருவாக்கிய போது ஏற்பட்ட மன நிறைவு வேறு எதிலும் உண்டாகவில்லை என்று அவர் கூறக் கேட்டிருக்கிறார் வண்ணப் படம் பிடித்த திரு **ஹரலிங்கம்.**

---

போது... ''ஓ ! நீங்களா ? எப்படி இருக்கிறீர்கள் ?'' என்ற அவள் கேள்வியில் ஒரு புது உற்சாகம் இருப்பதைக் கவனித்தான்.

''இந்தத் தடவை உங்களை... உங்களுக்குப் பிடித்தமான புடவைகளுடன் சந்திக்கலாம் என்று நினைக்கிறேன்... எப்போது வரட்டும்?''

''யூ ஆர் ஆல்வேஸ் வெல்கம்'' என்றவள், 'சட்'டென்று தன்னை அடக்கிக் கொண்டவள் மாதிரி தோன்றியது.

◘ ◘ ◘

''இந்தப் புடவை உங்களுக்கு ரொம்பப் பிரமாதமாகப் பொருந்தும்.'' — அவன் ஓர் அழகான பிரிண்டட் ஸாரியை எடுத்து வைத்து வியாக்கியானம் செய்து கொண்டிருந்தான்.

''பொருத்தம் பார்த்து நான் கட்டிக் கொள்வதில்லை.... ஏதோ கட்டிக் கொள்கிறேன்....'' — அவள் பெருமூச்சுவிட்டாள்.

''நீங்கள் இப்படிப் பேசக் கூடாது.... அழகற்றவர்கள் எல்லாம் சம்பந்தா சம்பந்தம் இல்லாமல் 'டிரஸ்' செய்து கொள்வதைப் பார்க்கும்போது நீங்கள்.... ஸாரி.... நான் சற்று அதிகப்படியாகப் பேசிவிட்டேன்.''

''புடவை விற்க வேண்டுமே என்ற கவலை உங்களுக்கு....''

''அது மட்டுமல்ல....'' — என்றவள் திடீரென்று குரலைத் தாழ்த்தி.... ''உங்களை நீங்கள் கண்ணாடியில் பார்த்துக் கொள்வதில்லையா ?'' — என்றான்.

அவள் திடுக்கிட்டவள்போல் ஒரு கணம் செயலற்றுப் போனான்... தப்பித் தவறிக்கூட அவள் கண்களை அவன் சந்திக்கவில்லை....

எப்போது எரிமலை வெடிக்கும், எப்போது மலர் மாரி பொழியும் ! ஒன்றும் சொல்வதற்கில்லை. அவன் எதற்கும் தயாராக இருந்தான். ஏனெனில், அவன் ஒரு சேல்ஸ்மேன் !

இந்த முறையும் நண்பன் சண்டைக்கு வந்தான்....

''சும்மா சும்மா புடவைகளை வாங்கிக் கொண்டு போய்த் திருப்பித் தருகிறாயே.... அடுத்த தடவை....''

''நானே பணம் கொடுத்து வாங்கிக் கொள்வேன்..... உன் கடை நம்பருக்கு ஏதாவது 'போன்' கால் வந்தால் உடனே எனக்குத் தகவல் தெரிவி... நான் வெளியூர் போயிருப்பதாகச் சொல்.''

நண்பன் கண் சிமிட்டினான்.

'போன்' வந்ததாக நண்பன் தகவல் அனுப்பினான்.... நாலு நாட்கள் கழித்துத் தலைவிரி கோலமாக அவளைக் காணப் போனான் அவன்.... அவனைக் கண்டு அவள் திகைத்தாள்....

'' நீங்கள்.... நீங்கள்.....''

'' நீங்கள் போன் பண்ணியதாகத் தகவல் சொன்னார்கள்....''

'' வெளியூர் போயிருப்பதாகச் சொன்னார்களே....''

''ஆமாம்.... வேலை தேடி...''

''அந்தக் கடை சேல்ஸ்மேன் வேலை....''

தயங்கினான்.

''சொல்லுங்கள்....'' — அவள் அவனை ஊக்கினாள்.

'' அது எதற்கு ? போகட்டும்... எதற்குக் கூப்பிட்டீர்கள் ?''

'' புடவை வேண்டும்....''

அவன் திகைத்து நிமிர்ந்தான்.

'' நான் புடவைகளை எடுத்துக் கொண்டு வந்தபோதெல்லாம் வேண்டாம் என்றீர்கள். நான் 'ஆர்டர்' கான்வாஸ் செய்யவில்லை, புடவைகளைச் சரியாக விற்கவில்லை என்று என்னைக் கடையைவிட்டு அனுப்பிய பிறகு புடவை கேட்கிறீர்கள்....''

அவள் படபடத்தாள்.

'' ஓ! உங்களுக்கு வேலை போய்விட்டதா?''

அவன் பேசவில்லை.

அவள் மெல்லப் பேசினாள்.... முதலில் தன் பதற்றத்தை வெளிப்படையாகக் காட்டிக் கொண்டதற்கு வெட்கப்பட்டவள் போல் மெல்லப் பேசினாள்.

''என்னாலே உங்களுக்கு வேலை போய்விட்டது. ஸாரி. இரண்டு முறையும் உங்களை வெறும் கையுடன் அனுப்பிவிட்டேன்..''

''பரவாயில்லை. இது எனக்குச் சகஜம் தான். ஏனென்றால் நான் ஒரு சேல்ஸ்மேன்!''

''நான் பணம் தருகிறேன். புடவையைக் கொண்டு வந்து தாருங்கள்...''

அவன் மெல்லச் சொன்னான்... ''என்னை மன்னித்து விடுங்கள். நான் இனி புடவைக் கடைக்குள் நுழைவதில்லை என்று தீர்மானித்திருக்கிறேன்...''

''ஏன்?''

''ஏனோ... ஏனோ தெரியவில்லை. அந்தக் கடையில் இருந்தபடி ஒவ்வொருவருக்காகப் புடவைகளை நான் பிரித்துப் போடும்போது



பலுச்சரி

மேற்கு வங்காளத்தில் முர்ஷிதாபாதிலுள்ள பலுச்சர் கிராமத்தின் சித்திர வேலைப்பாடுகள் 'அம்ரு' என்னும் பெயரால் புகழ் பெற்றவை. இவை எவ்வித ஜரிகையும் உபயோகிக்கப்படாமல், வண்ணப் பட்டு நூல்களாலேயே நேர்த்தியாக நெய்யப்படுகின்றன. இத் துணிகள் தனிச் சிறப்புள்ள முறையில், 'பலுச்சரி' புடவைகளில் உபயோகிக்கப்படுகின்றன. இந்தப் புடவைகள், மனிதர் மற்றும் பிராணிகளின் உருவங்களைத் தாங்கி வரும் கலையழகு சொட்டும் புடவைத் தலைப்புகளுக்கும், நேர்த்தியான மாம்பழ உருவத்தில் 'குஞ்ச்' எனப்படும் டிசைன்களுக்கும் புகழ் வாய்ந்தவை.

ஒவ்வொரு புடவையின் மடிப்பிலும் வெறுமையான உங்கள் முகம், மூளிக் கழுத்து இவை... இவைகள்தாம் என் கண்முன் வந்தன.

''நானேதான் வேலையைப் போக்கிக் கொண்டேன்.... எனக்கு... எனக்கு இதற்கு மேல் சொல்லத் தெரியவில்லை.''

அவள் நிமிரவே யில்லை.

அவளிடமிருந்து விம்மல் ஒலி வெளிப்பட்டது. அதற்குப் பிறகு...?

அவளுக்கு அவன் தயவில் ஒரு வேலை கிடைத்து விட்டது.

அவன் அவளைச் சந்திக்க அடிக்கடி வந்து போய்க் கொண்டிருந்தான்.

அவர்கள் பழகினார்கள், பேசினார்கள். அவன் மிக ஜாக்கிரதையாக நடந்து கொண்டான். தப்பித் தவறிக்கூட அவள் பணத்துக்காகவும் அவள் உடலழகுக்காகவும் அவன் அலைவதை வெளிப்படுத்திவிடவில்லை.

அன்று மாலை அவளைக் காண வந்தான். அவள் சிரித்தபடி அவனை வரவேற்றாள்.

''ஏது இன்று ரொம்பக் குஷியாக இருக்கிறீர்கள்... என்ன சமாசாரம்?''

''இன்றுதான் என் முதல் சம்பளத்தை வாங்கினேன்.... முதல் சம்பளத்தைத் தெய்வத்துக்குத்தான் காணிக்கை செலுத்துவார்கள். இல்லையா?''

''சொல்லுங்கள்...''

''என் தெய்வத்துக்கு ஒரு பரிசு கொண்டு வந்திருக்கிறேன் .... தெய்வம் ஏற்றுக் கொள்ளுமா?''

''தெய்வம் கல்தானே... எதையும் ஏற்றுக் கொள்ளும்... நாஸ்திகனையும் அது ஒன்றும் செய்வதில்லையே...''

அவன் தயங்கினான்.

அவள் காலடியில் ஓர் அழகான வெல்வெட் பெட்டியை வைத்தான். அதற்குள்...? ஓர் அழகான மோதிரம்!

''நவரத்தின மோதிரம்... நவரசங்களில் அன்பையும் பக்தியையும் தவிர நீங்கள் எதையுமே வெளிப்படுத்துவதில்லை... அதனால் இந்த நவரத்தினங்களாவது தங்கள் விரலை அலங்கரிக்கட்டும்...''

அவள் பேசாமல் இருந்தாள். ''இது ரொம்ப அதிகம்... டூ மச்.''

''இல்லை. உங்கள் அன்புக்கு முன் ரொம்ப அற்பம்...''

அவள் அதையே வெறிக்கப் பார்த்தாள்.

''ஒரே ஒரு சின்ன ஆசை...''

அவள் உடல் நடுங்குவதை அவனால் உணர முடிந்தது.

''சொல்லுங்கள்...''

''இதை... இதை... நான்தான் என் தெய்வத்தின் விரலில் போட வேண்டும். அனுமதிப்பீர்களா?''

அவள் இன்னமும் பேசாமல் இருந்தாள். அவள் மௌனத்தையே சம்மதத்தின் அறிகுறியாக எடுத்துக் கொண்டு அவள் கரங்களை மெல்லப் பிடித்தான். மிக மிக நிதானமாக அந்த நவரத்தின மோதிரத்தை அவள் மோதிர விரலில் அணிவித்தான். மிக மென்மையாக அந்தக் கையை முத்தமிட்டான்.

''நான் வரட்டுமா?'' என்று அவன் விடை பெற்றபோது அவள் விம்மி விம்மி அழுது கொண்டிருந்தாள்.

''நீங்கள் ஏன் வந்தீர்கள்? நீங்கள் ஏன் வந்தீர்கள்?'' அரற்றியபடியே பலவின உணர்ச்சியால் உந்தப்பட்டவளாக அவள் தன் முகத்தை மூடிக்கொண்டு அழுதாள். அந்த விரலில் அந்த மோதிரம் மிக அழகாகப் பொருந்தி யிருந்தது.

மாலை அவன் 'போன்' செய்தான்.

''வருகிறீர்களா? இன்று 'எண்டர் தி டிராகன்' இரண்டு டிக்கட்டுகள் ரிசர்வ் செய்திருக்கிறேன். போகலாமா?'' – அவள் ஒரு கணம் தயங்கினாள்.

''ஓ! ரொம்ப நல்லது! சாயங்காலம் ஐந்து மணிக்கு வருகிறேன். தயாரா யிருங்கள்!''

அவள் ரெடியாக இருந்தாள்.

இன்னமும் அவள் வெள்ளைப் புடவை, பிரிண்டட் சாரிதான் கட்டியிருந்தாள்.

இருவரும் கிளம்பினார்கள். அவன் காரை அவனே ஓட்டினான். அருகில் அவள்.

மாலை நேரம்... மயக்கும் பொழுது..ஏ.ஸி. தியேட்டர்... தனியான 'பாக்ஸ்'.

'இண்டர்வெல்...'

பாப்கார்னும், ஐஸ்க்ரீமும், வெஜிடபிள் பப்பும் சுவைத்தபடி சினிமாவைப் பற்றிய பேச்சுக்களில் அவன் இறங்கினான். அவள் 'மூடை' மாற்றி, அவளை இயல்பாக்க முயன்றான். அவளும் பேச முயன்றாள். ''உங்களுக்கு இந்தப் படத்தில் எந்த இடம் பிடித்தது?''

''ஓ! கராத்தே சண்டை பிரமாதம் இல்லை?''

''அந்தக் கதாநாயகனின் சகோதரி போடும் 'கராத்தே சண்டை' ரொம்பவும் கவரும்படியாக இல்லை?'' – அவள் ஐஸ்கிரீமைச் சுவைத்தபடி கேட்டாள்.

''ஆமா. உண்மையா அற்புதம்தான்! அதுவும் தன் கற்பைக் காப்பாற்றிக் கொள்ள அவள் ஓட்ட ஓட்டமாக ஓடியபடி...சண்டை போட்டபடி... கடைசியில் தன்னைக் காப்பாற்றிக்கொள்ள வேறு வழியே இல்லை என்றதும் அந்த உடைந்த கண்ணாடித் துண்டால் தன்னைக் குத்திக் கொண்டு சாகிறாளே... அவள் ஓர் உண்மையான கதாபாத்திரம்!''

விளக்கு அணைந்து விட்டது. ஐஸ்கிரீமை அவளால் சாப்பிட முடியவில்லை...உள்ளமே பனியாக உறைந்தது. நெற்றியில் பொட்டுப் பொட்டாக வியர்வைத் துளிகள்... அவன் என்ன சொன்னான்? 'கற்பைக் காப்பாற்றியபடி...ஓடியபடி...அவள் ஓர் உண்மையான கதாபாத்திரம்!' அவள் எழுந்தாள்.

''என்ன? ஏன்? ஏன்?'' – அவன் படபடத்தான். என்ன தவறு? என்ன நடந்தது?

''நம்ம கதை முடிந்து விட்டது. 'எண்டரிங் தி டிராகன்'...நுழைந்ததுமே! என்னை மறந்துவிடுங்கள். தோல்விகள் உங்களுக்குப் புதிதல்ல... ஏனெனில் நீங்கள் ஒரு சேல்ஸ்மேன்! நான் வருகிறேன்.'' அவள் தனியாகக் கிளம்பி விட்டாள்.

அவனுக்கு ஒன்றும் புரியவில்லை. மறுநாள் நவரத்தின மோதிரம் திருப்பி அனுப்பப்பட்டு வரும்போது புரியும்.

---

## எடுத்தால் குற்றம் வைத்தால் குற்றம்!

பல் தேய்த்த பிறகு பேஸ்ட் ட்யூபின் மூடியைத் திரும்பப் போடுவதில்லை என்று என் மனைவி குறை கூறி வந்தாள். ஒரு நாள் ஞாபகமாக ட்யூப் மூடியைத் திரும்பி மூடி வைத்தேன். அன்று என் மனைவி பேஸ்ட் உபயோகித்து நான் பல் தேய்க்கவில்லை என்று குறை கூறினாள்! கே.ஆர். - டிட்பிட்ஸ்

புதிய

# டால்ஃப்®

# மூட்டைப் பூச்சித் தொல்லையிலிருந்து 100% உத்தரவாதம்

## வாரக்கணக்கிலும் ...குறைந்த செலவிலும்



புதிய டால்ஃப், மூட்டைப் பூச்சிகளை ஒழித்து, உங்களுக்கு 100% விடுதலை அளிக்கிறது.



புதிய டால்ஃப், தெளிக்கப்பட்ட இடத்தில் வாரக்கணக்கில் தங்கிச் செயலாற்றுகிறது.(அது தெளிக்கப்பட்ட இடத்திலிருக்கும் வீரியமுள்ள மருந்துப் படலத்தைத் துடைத்து விடாதீர்கள்)

**நெடுங்காலம் 'தங்கிச் செயலாற்றும்' அபார சக்தி!**

சக்தி வாய்ந்த புதிய டால்ஃப் மூட்டைப் பூச்சித் தொல்லையிலிருந்து வாரக்கணக்கில் உங்களுக்கு விடுதலை அளிக்கிறது. ஏனெனில், அதன் இணையற்ற 'தங்கிச்-செயல் புரியும் ஆற்றல்' நெடுங்காலம் நீடிக்கிறது.

**மிகுந்த சிக்கனம்!**

புதிய டால்ஃப் மிகவும் சிக்கனமானது. முதலில், இதற்காகும் செலவு மிக மிகக் குறைவு. இரண்டாவது, இது நெடுங்காலம் 'தங்கிச் செயல் புரிவதால்', பல வாரங்கள் வரை, நீங்கள் இதை மீண்டும் தெளிக்க வேண்டாம்!







புதிய 50 மி.லி. பேக்! ரூ.2.47 மட்டுமே.
வரிகள் தனி

# டால்ஃப்®

மூட்டைப் பூச்சிகளின் தொல்லையிலிருந்து பூரண விடுதலை ®

பாயர் சர்வதேச ஆராய்ச்சியின் நிரூபணமான தயாரிப்பு

# இப்பொழுது: நெஸ்கஃபே 200 கிராம் பலவித உபயோகங்களுக் குரிய ஜாடியில்




முந்துங்கள்! குறைந்த கையிருப்பே உள்ளது.

**நெஸ்கஃபே®**



உலகிலேயே மிக அதிகமாக விற்பனையாகும் இன்ஸ்டன்ட் காபி

## குட்மார்னிங் டாக்டர்!

# கொசுவினால் பரவும் ஈசனோஃபிலியா!

அபூபக்கர் இருமிக் கொண்டே வந்தார். ''ஒரு வாரமாக இப்படித்தான் ஓயாமல் இருமுகிறது. இருமல் 'சிரப்' சாப்பிட்டேன். பலனில்லை. நேற்றிரவு மூச்சுவிடுவதுகூடச் சிரமமாக இருந்தது. நெஞ்சை இறுக்கிப் பிடிக்கிற மாதிரி இருந்தது. இரவில்தான் இருமல் அதிகமாக இருக்கிறது'' என்று கூறிவிட்டு மீண்டும் இருமத் தொடங்கினார். ஸ்டெதாஸ்கோப் வைத்து அவரைச் சோதித்த பிறகு, அவரது மார்புப் பகுதியை எக்ஸ்–ரே படம் எடுக்க ஏற்பாடு செய்தேன். இரத்தப் பரிசோதனைக்கும் ஏற்பாடு செய்தேன். எக்ஸ்ரே–படத்தை நான் பரிசீலனை செய்யும் போது, ''என்ன, டாக்டர்! எலும்புருக்கி நோய் இல்லையே...?'' என்று கவலையோடு வினவினார், அபூபக்கர். முப்பது வயதுதான் அவருக்கு. அவரது கவலை நியாயமானதுதானே ?

''டி. பி. இல்லை. எதற்கும் இரத்தப் பரிசோதனையின் முடிவையும் பார்த்துவிட்டுச் சொல்கிறேன்'' என்று நான் கூறியதும் அவருக்கு ஓரளவு நிம்மதி ஏற்பட்டது. இரத்தப் பரிசோதனையின் முடிவு நான் எதிர்பார்த்த படியே இருந்தது. ஒரு கன மில்லிமீட்டர்



இரத்தத்தில் 3000க்கு மேற்பட்ட ஈசனோஃபிலிஸ் செல்கள் (*Cell*) இருப்பது தெரிய வந்தது. அதுதான் அபூபக்கரின் வாய் ஓயாத இருமலுக்குக் காரணம். அவருக்கு மருந்து எழுதிக் கொடுத்து, 'ஒரு வாரத்தில் நன்முகக் குணமாகிவிடும். 5, 6 நாட்களுக்குப் பிறகு வந்தால் போதும்' என்று கூறி அனுப்பி வைத்தேன்.''

**''சாதாரணமாக இரத்தத்தில் எத்தனை ஈசனோஃபிலிஸ் செல்கள் இருக்க வேண்டும்?''**

''ஒரு கன மி.மீ.இல் 30 முதல் 50 செல்கள் வரை இருந்தால் 'நார்மல்'. இந்நோய் கண்டவருக்கு 20,000 செல்கள் அல்லது 30,000 செல்கள் வரைகூட இருக்கும். அது முற்றிய நிலை. 1750க்கு மேல் போனால் ஜலதோஷம், இருமல் தோன்றும் வாய்ப்பு உண்டு. நோய் முற்றாத நிலையில் ஹெட்ரஸான், பானேசைட் முதலிய மாத்திரைகளால் இந்நோய் ஒரு வாரத்தில் குணமாகும். இந்த மாத்திரைகளுக்குக் கட்டுப்படாத நோய்களை 'யூனிகார்பஸான் ஃபோர்ட்' ஊசி மருந்தினால் குணப்படுத்தி விடலாம்.''

**''ஒரு கன மில்லி மீட்டருக்கு 20,000, 30,000 செல்கள் என்றெல்லாம் உயர்வது உண்டு என்று கூறினீர்களே – அப்பொழுது நோயின் கடுமை மிகுதியாக இருக்கும் அல்லவா?''**



''ஆமாம். இருமல் கடுமையாக இருக்கும். நோயாளிக்கு மூச்சு விடுவதே சிரமமாக இருக்கும். இதற்கு ஒரு மெஷின் இருக்கிறது. அந்த இயந்திரம் நோய்க்குக் கொடுக்கப்படும் மருந்தினை மிக மிக நுண்ணிய துகள்களாக்கி நேரடியாகவும் உடனேயும் (*Direct action*) பரிகாரம் அளிக்க உதவுகிறது. 30,000 லிருந்து 20,000 செல்களாகக் குறைந்தாலும் நோயாளிக்கு நிரம்பப் பரிகாரம் கிடைக்கிறது. 10,000 செல்களாகக் குறைந்தால், நோய் நீங்கிவிட்ட மாதிரி நோயாளி நிம்மதி பெறக்கூடும். ஆனால், இந்த நிலையில் நோய் அறவே நீங்கிவிட்டது என்று தவறாக எண்ணிச் சிகிச்சையை நோயாளி கைவிட்டுவிடுவது தவறு. 1750 செல்களுக்கும் கீழே செல்லும் வரை சிகிச்சை நீடிக்க வேண்டும்.''

**''இந்நோய் வராமல் தடுக்க என்ன வழி?''**

''கொசுக்களால் இது பெருகுவதால், கொசுக்கடியிலிருந்து மக்கள் தப்ப வேண்டும். கொசு வலை கட்டிக் கொண்டு இரவில் தூங்குவது நல்லது. இருமல் வந்து ஒரு வாரத்துக்கு மேல் அது நீடித்தால் உடனே மருத்துவரை அணுக வேண்டும். ஆண்–பெண் இருபாலாருமே இந்நோய்க்கு இலக்காகக் கூடும். பொதுவாக 15 முதல் 40 வயது வரை உள்ளவர்களே இந்நோயினால் அதிகம் பாதிக்கப்படுகின்றனர்.''

**டாக்டர் பிரதாப் ஸி. ரெட்டி கூறக் கேட்டு**

**எழுதியவர் ஆர். பி**

# பாடுவோம் பாப் மியூசிக்! 17

கதை: தமயந்தி/சாருகேசி

சித்திரம்: ராஜு















என்ன மிஸ்டர் மார்க்கசகாயம், அந்த லிங்கத்தோட பிள்ளை பாஸ்கரனையத்தான் நீங்கள் மாப்பிள்ளையாக்கிக் கொள்ளப் போகிறதாகச் சொன்னார்கள்...

பாலாஜியா! சரியான கிறுக்குன்னு அது! என் பொண்ணை அவனைத் தான் பண்ணிப்பேன்றாளும், நான் குறுக்கே விழுந்து தடுக்க மாட்டேடா! ஹ!

எங்கே பெண்ணையும், மாப்பிள்ளையையும் காணோம்? சோபாவிலே உட்கார வைக்கலியா, மாலை போட்டு?

அங்கேதான் இருக்கு விஷயம். அங்கே பாருங்கோ. மேடை மேலே. மாலை போட்டுண்டு, கழுத்திலே கிடார் மாட்டிண்டு வெளுத்துக் கட்டறாரே அவர்தான் மாப்பிள்ளை மிஸ்டர் அருண். வித்யா அதோ பக்கத்திலே நின்னு கூட பாடறா.

அதிர்ஷ்டசாலி ஐயா! மியூசிகல் ஸ்டார்ஸ் டைரக்டர் மிஸ்டர் காளிதாஸோட பிள்ளையில்லையோ அந்த அருண்?

ஆமா ஆமா... பெரிய இடம்.. மாப்பிள்ளை அருண் பாட ஆரம்பிச்சதிலேருந்து ஆடியன்ஸே மயங்கிக் கிடக்கு!

அதுக்கு முன்னாலே உம்ம பெண் மயங்கிட்டா, அதைச் சொல்லும்.

ஹ ஹ ஹ ஹ ஹா!

மேடையில் அருணும் வித்யாவும் கழுத்தில் மாலையுடன், பின்னால் மியூசிக் ட்ரூப்புடன், பாடிக் கொண்டிருக்கிறார்கள்.

## வயலின் கச்சேரி



சென்னை, திருவல்லிக்கேணி ஸ்ரீ பார்த்தசாரதி சுவாமி சபையின் ஆதரவில் நடைபெற்ற நவராத்திரி விழாவில் குமாரி எஸ். மஞ்சுளா தனி வயலின் கச்சேரி செய்தார். சுமார் இரண்டு மணி நேரம் நடந்த அவரது கச்சேரியில் பண்பட்ட சாதகம் அருமையாக வெளிப்பட்டது.

மதுரமான ராகங்கள் பலவற்றில் அமுதமான கீர்த்தனைகள் பல வாசித்தார். பாபநாசம் சிவனின் "என்ன தவம் செய்தனை" என்ற காபி ராகப் பாடலை எத்தனை தரம் கேட்டால்தான் என்ன? இதைக் கேட்க என்ன தவம்செய்தோமோ?' என்றுதான்தோன்றும். சிறுவன் தரனிதரன் மிருதங்கம் வாசித்து அனைவரையும் மகிழ்வித்தான்.

குமாரி எஸ். மஞ்சுளா, எலெக்ட்ரிகல்சர்வீசஸ் உரிமையாளரான ஸ்ரீ என். ஸ்ரீநிவாசமூர்த்தி அவர்களின்புதல்வி. ஸ்ரீ டி. வி. தனபால் அவர்களிடம் வயலின்வாத்தியத்தில் பயிற்சிபெற்றவர். இசைத் துறையில் மேலும் பெரும் புகழும் பெற வாழ்த்துகிறோம்.

## குமாரி வைதேகி



ஸ்ரீ ஸ்ரீ எல். நரசிம்மன் அவர்களின் புதல்வி குமாரி வைதேகியின் பரத நாட்டிய அரங்கேற்றம் அண்மையில் அதிவிமரிசையாக நடந்தேறியது. பரத நாட்டியக் கலையில் சிறந்து விளங்கும் பத்மாலயாவின் தலைவியான சுடர்க்கொடி பத்மாவின் மாணவி என்பதை வைதேகியின் ஒவ்வொரு அசைவிலும் காண முடிந்தது.

பாபநாசம் சிவன் அவர்களின் "கா வாவா" பாட்டிற்கு வைதேகி பிடித்த தூய்ந்த அபிநயங்கள் சபையோரைப் புளகமுறச் செய்தன. வைதேகி நடனக் கலையில் பெற்றிருக்கும் தேர்ச்சி அன்றைய நிகழ்ச்சியில் அதியற்புதமாக வெளிப்பட்டது; பதங்களின் பொருளை உணர்ந்துகொண்டு அவர் பிடித்த லாகவமான அபிநயங்கள் பரவசப்படுத்தின; பாத வேலைகள், அடவுகள் சிறப்பா யிருந்தன. குமாரி வைதேகிக்கு ஒளிமயமான எதிர்காலம் இருக்கிறது. அவருக்கு நம் நல்வாழ்த்துக்கள்.

ஸ்ரீமதி அன்னபூர்ண நாகராஜன் அவர்கள் பாடிய பதங்கள் சுஸ்வரமும் சுநாதமுமாய் மண்டபத்தில் பரவியது.

## சப்த தாண்டவம்



பரதக் கலையின் ஆதாரக் கடவுள் தில்லை திருச் சிற்றம்பலத்தில், சிதாகாசப் பெருவெளியில், திக்கெட்டு திகந்தங்களும் அதிர ஆடும் சிறப்பு நடனங்கள் ஏழு. அவ்வேழு நடனங்களையும் அண்மையில், மயிலை ரசிக ரஞ்சனி சபா ஹாலில் திருமதி எம்.கே. சரோஜா அதியற்புதமாக ஆடிக் காட்டினார். தில்லை, மதுரை, திருப்புத்தூர், திருக்குற்றாலம், திருவாலங்காடு, திருநெல்வேலி ஆகிய சிவஸ்தலங்களில், ஆலமுண்ட நீலகண்டப் பெருமான் ஆடிய தெய்விக நடன மூர்த்தங்களைத் திருமதி சரோஜா மேடையில் தத்ரூபமாக அபிநயித்துக் காட்டியது ரசிகப் பெருமக்களின் ஆரவாரக் கையொலியுடன் அமோகமான வரவேற்பைப் பெற்றது. சம்ஹார மூர்த்தியின் இறுதி நர்த்தனத் தோற்றமான காட்சிக்கூத்து ரசிகர்களை மெய்சிலிர்க்கச் செய்து விட்டது.

பரதநாட்டியத்தில் அருங்கலை விநோதரான குரு காட்டுமன்னார்கோயில் முத்துக்குமரப் பிள்ளையின் மாணவி திருமதி சரோஜா. பிரபல பரத நாட்டியக் கலைஞர்களான கலைமாமணிகள் நடராஜ் - சகுந்தலாவை அணுகி இந்த சப்த தாண்டவ நிகழ்ச்சிகளுக்கான நடன அமைப்பை அரிதில் பெற்று அரங்கேற்றிவிட்டார்.

இந்நிகழ்ச்சிக்குப் பிறகு நடராஜ்-சகுந்தலாவின் மாணவரான சிவசங்கரனின் நவரஸ நடனமும் இடம் பெற்றது. நவரசங்களையும் ராமாயணக் காவியத்திலிருந்து எடுத்து அபிநயம் பிடித்துக் காட்டினார். மிகவும் சுவாரஸ்யமாக இருந்தது.

- காந்தன்

ஆடையில்
பெண்மையின்
இழையோடும் போது
பெண்மைப் பேரழகு
புன்னகை புரியும்!

நிச்சயமாக, மஃபத்லால் க்ரூப்
அளிப்பவை நேர்த்தியான
துணிமணிகள்தான்!




TM

# சேரமான் காதலி

அத்தியாயம் 10

## ஊசலாடும் தர்மம்

ராஜசேகர சுவாமி சொன்ன பூர்வ ஜென்மக் கதையில் சேரமானுக்கு உண்மையிலேயே நம்பிக்கை பிறந்து விட்டது.

அஞ்சலவேளைப் பற்றியோ, தரங்கிணியைப் பற்றியோ முன்பின் தெரியாத அவர், அவர்களையும் அவர்களோடு தான் சம்பந்தப்பட்ட நிகழ்ச்சிகளையும் சேர்த்துச் சொன்னதால், அவரது வரும்பொருள் உரைக்கும் தன்மையிலும் அவருக்கு நம்பிக்கை உண்டாயிற்று.

நாடி சாத்திரம் பற்றிச் சேரமான் கேள்விப்பட்டிருக்கிறார். ஆகவே இவை உண்மையாக இருக்கலாம் என்றும் நம்பினார்.

மலையில் இருந்து திரும்பிய உடனேயே இந்த நிகழ்ச்சி நடைபெற்றதால் — இந்தச் செய்தி சொல்லப்பட்டதால் — அதில் சிறிதுகூடச் சந்தேகப்பட அவரால் முடியவில்லை.

ஒரு வயிற்றில் ஒரு குழந்தை வளருகிறது — அது தனக்கும் சேர நாட்டுக்கும் அழிவுச் சக்தியாக விளங்கப் போகிறது— இந்தச் செய்தி பூஜியானுவைப் பற்றியதாக அல்லாமல் வேறு யாரைப் பற்றியதாக இருக்க முடியும் ?

— எல்லோரும் அறிந்து கொள்ளும் படி அந்தச் செய்தியை நிமித்திகர் சொல்லி விடுவாரோ என்று சேரமான் பயந்தார்.

''சுவாமி! எல்லா விஷயங்களையும் நாம் திருவஞ்சைக் களத்துக்குச் சென்று பேசிக் கொள்ளலாம். வாருங்கள் ; புறப்படலாம்'' என்று அவரை அழைத்தார்.

''நல்லது. நானும் சற்று ஓய்வாகவேதான் வந்திருக்கிறேன். செல்லலாம்'' என்று ஒப்புதல் அளித்தார், ராஜசேகர சுவாமி.

எல்லோரும் ரதங்களில் ஏறினார்கள்.

மெல்லினங் கோதையும், மார்த்தாண்டவர்மனும் வழி அனுப்பினார்கள்.

பத்மாவதியோடு ஒரே ரதத்தில் செல்ல வேண்டிய சேரமான், அவளையும் தரங்கிணியையும் ஒரு ரதத்தில் ஏற்றி விட்டு, தம்மோடு ராஜசேகர சுவாமியை ஏற்றிக் கொண்டார்.

ரதம் புறப்பட்டுக் கொஞ்ச நேரம் வரையிலே இருவரும் எதுவும் பேசவில்லை.

அந்த ரதத்தில் பூட்டப்பட்ட இரட்டைக் குதிரைகளின் காலடி ஓசை ஏதோ ஓர் அவல ஒலி போல் சேரமானுக்குத் தோன்றிற்று.

குதிரை கனைத்ததுகூடக் குழந்தை ஒன்று பயங்கரமாகச் சத்தமிடுவது போல் அவர் காதுகளுக்குக் கேட்டது.

சரியோ தவறோ ஒரு விஷயம் நம்பும்படி சொல்லப்பட்டு விட்டால் அது விநாடிக்கு விநாடி விசுவரூபம் எடுக்கும்.

பூஜியானுவை நினைக்கும்போது அவளது அழகும், அறிவும், அன்பும் சேரமானின் உயிரில் நின்று விளையாடின.

நிமித்திகர் சொன்ன அந்தச் செய்தியை நினைத்தபோது அவரது கற்பனா சக்தியில், பேய் ஒன்றின் தேவதா வடிவம்போல் அவள் தோன்றினாள்.

தனது பூர்வ ஜன்மத்தின் மற்றப் பகுதிகளையும் அறிந்துகொள்ள அவர் விரும்பினார்.

''சுவாமி! நீங்கள் சொன்ன விஷயங்கள் உண்மைதான். ஒரு குழந்தை ஒரு வயிற்றில் வளர்வதும் உண்மைதான். பூர்வ ஜென்மத்தைப் பற்றி எனக்குத் தெரியாது. இந்த ஜென்மத்தைப் பற்றி நீங்கள் சொன்னவை சரியானவையே. ஆனால், பூர்வ ஜன்மத்தில் என் கதையின் தொடர்ச்சி என்ன? இப்படி ஒரு குழந்தை இந்த ஜன்மத்தில் வரவேண்டிய அவசியம் என்ன?'' என்று கேட்டு, சுவாமிகளின் மௌனத்தைக் கலைத்தார்.

''உன் முதல் கதை கதலியின் கதை. இந்தக் குழந்தையின் கதை கடைசிக் கதை. இவை இரண்டுக்கும் இடையில்

கண்ணதாசன்

இன்னுமொரு கதை உண்டு. அதுதான் உன் மனைவி பத்மாவதியின் கதை.

கேள்: கோதத்தன் மகள் கதலி இறந்ததும் பூதத்தன் மகள் பவளவல்லியின் மீது உன் பார்வை திரும்பியது. பவளவல்லி பிடிவாதக்காரி. தன் அழகைப் பற்றியும், அறிவைப் பற்றியும் அவளுக்கோர் ஆணவம் உண்டு. அவள் உன்னை மிகவும் அலட்சியப்படுத்தினுள்.

கபாடபுரத்துப் பெண்கள் எப்படி இருப்பார்கள் என்று நான் உனக்குச் சொல்லவில்லையே? இன்றைய சேர நாட்டுப் பெண்களைப் போல் அவர்கள் தலைமுடியை நீளமாக வளர்ப்பதில்லை. கொண்டை போடுவதில்லை. பசுவின் நெய் போட்டுச் சுருட்டி விடுவார்கள். ஒரே பாவாடையை மார்பு வரை அணிந்து அதன் ஒருபுறத்தை வலது புறத் தோளின் மீது முடிச்சாகப் போட்டுக் கொள்வார்கள். முழுங் காலுக்குக் கீழே ஆடை இருக்காது. ஆனல் பாதத்துக்கும் முழங்காலுக்கும் நடுவே வங்கி வளையல் ஒன்றை மாட்டியிருப்பார்கள். ரோமமில்லாத கால்களில் அவை தகதகவென்று பிரகாசிக்கும்.

பவளவல்லியின் மீது பைத்தியம் கொண்ட நீ, அவளது இல்லத்திலேயே அவளைச் சந்திக்கப் பல தடவை முயன்ருய். அதில் தோல்வியுற்ற காரணத்தால் முத்து மண்டபத்தில் அவளைச் சந்திக்க விரும்பினுய்.

அங்குதான் ஆண்கள் நுழைய முடியாதே?

அதற்காக நீ பெண் வேடம் போட முடிவு செய்தாய்.

ஒரு பெண்ணுக்குரிய நளினமும் உன்னிடம் இருந்ததால் அதை உன்னல் சுலபமாகச் செய்ய முடிந்தது.

ஏடு படிக்கும் பெண்போல் நீ ஒரு நாள் அந்த மண்டபத்துக்குள் நுழைந்தாய். ஒவ்வொரு பெண்ணும் ஒவ்வொரு மூலையில் அமர்ந்து ஏடு படித்துக் கொண்டிருந்தார்கள். பவளவல்லிக்குச் சற்றுத் தூரத்தில் சென்று நீ அமர்ந்தாய்.

எல்லோரும் மௌனமாகப் படித்துக் கொண்டிருந்த இடத்தில் பெண்ணைப் போலவே குரலை மாற்றிக்கொண்டு நீ மெதுவான குரலில் படித்தாய்.

கற்பியல் பற்றியும், களவியல் பற்றியும் ஏட்டில் இல்லாத விஷயங்களையெல்லாம் நீ கற்பனையில் உதிர்த்தாய்.

'காதல் துறையில் சுகமானது களவியலே' என்று நீ படித்ததும் கோபம் கொண்ட பவளவல்லி, தானும் சத்தம் போட்டுப் படிக்க ஆரம்பித்தாள்.

'களவியல் என்பது பைசாசப் பெண்களுக்கு மட்டுமே பொருந்தும்' என்று அவள் படித்தாள்.

'நற்குடி மாதர்க்கும் களவியல் நல்ல வழியே' என்று நீ படித்தாய்.

'களவியல் உணர்வே சீர்கெட்ட குடிப் பிறப்புக்களுக்குத்தான் வரும்' என்று அவள் படித்தாள்.

'தெய்வமாக் கதைகளிலும் களவியல் புகழ்ந்துரைக்கப்படுவதாக' நீபடித்தாய்.

'மானுடம் தெய்வதமாவது களவியலில் அல்ல' என்று அவள் படித்தாள்.

ஆனல் 'உனக்குப் பதில் சொல்வது போல் அவள் படித்தாளே தவிர உன் சாமர்த்தியத்தை வியந்து கொண்டேயிருந்தாள்.

நீ கற்பனையில்தான் படிக்கிருய் என்பதை அவள் புரிந்து' கொண்டாள். காரணம், அவளும் கற்பனையில்தானே பதில் சொன்னுள்.



மெதுவாக அவள் ஏட்டைக் கீழே வைத்து விட்டு உன்னைப் பார்த்து, ''யாரடி நீ? இது வரை இந்த மண்டபத்தில் உன்னைப் பார்த்த தில்லையே!'' என்று கேட்டாள்.

'' என் பெயர் மாணிக்கவல்லி. தோரண புரத்தில் ஒரு வணிகரின் மகள். பட்டியில் நடத்திய வாணிபம் பயனில்லை என்று கபாட புரத்துக்கு வந்தார்கள் என் பெற்றோர். வந்து இரண்டே தினங்கள் ஆகின்றன. இம் மண்டபம் பற்றி இன்றுதான் நான் கேள்விப் பட்டேன். ஏடு படிக்க வந்தேன் என்றாய் நீ.''

''ஏட்டில் இல்லாததெல்லாம் படிக்கி றாயே...?'' என்று கேட்டாள் அவள்.

''ஒன்றைப் படிக்கும்போது ஒன்று தோன் றுகிறது. அதை வாய் விட்டுச் சொல்கிறேன். அறிவை வளர்த்துக் கொள்வதற்கு அது தானே வழி?'' என்றாய் நீ.

''திறமையுள்ளவளேதான் நீ!'' என்றான் அவன்.

''என் அழகாய் இல்லையா...?'' என்று கேட்டாய் நீ.

''பெண்ணே, பெண்ணை வியக்க முடி யாதே தாயே!'' என்றான் அவன்.

''என்னை வியக்கத் தோன்றவில்லையா உனக்கு?'' என்று கேட்டாய் நீ.

''வியந்து பயனென்ன?'' என்று கூறிக் கொண்டே எழுந்தான் அவன்.

அவன் மண்டபத்தை விட்டு வெளியேறிய போது நீயும் பின்தொடர்ந்தாய்.





பேனா வியாபாரி: நான் மூன்று ரூபாய் பேனாவை இரண்டு ரூபாய்க்குத் தருகிறேன்.

வாங்க வந்தவர்: இரண்டு ரூபாய் பேனாவை?

பேனா வியாபாரி: இரண்டு ரூபாய் பேனாவை ஒரு ரூபாய்க்குத் தருகிறேன்.

வாங்க வந்தவர்: ஒரு ரூபாய் பேனாவை?

பேனா வியாபாரி: ஒரு ரூபாய் பேனாவைச் சும்மாவே தருகிறேன்.

வாங்க வந்தவர்: சரி! அதில் ஒன்று கொடுங்கள்.

பேனா வியாபாரி: இன்னும் அந்தப் பேனா உற்பத்தி ஆகி விற்பனைக்கு வரலீங்க!

ஸ்ரீரங்கம் ரா. ராகவன்

---

சாதாரணமாக ஒரு ரதத்தில் நான்கு காவலர்களோடு செல்லும் அவளை, 'நடந்தே பேசிக் கொண்டு செல்லலாமே...' என்று அழைத்தாய் நீ.

அவளுக்கும் ஏனோ உன்னோடு பேச வேண்டும் போல் தோன்றிற்று.

இருவரும் பேசிக் கொண்டே நடந்தீர்கள்.

கபாடபுரத்தில் ஒரு பழக்கம் உண்டு. அங்கே கடற்கரை ஓரமாகப் பிரம்மாண்டமான தூண் ஒன்று எழும்பி நிற்கும். மழை வரப் போகிறதென்றால் அதை அறிவிப்பது போல் ஒரு கழுகு வந்து அந்தத் தூண் மீது அமரும். நகரின் எந்த மூலையிலிருந்தும் அதைப் பார்க்க முடியும்.

நீங்கள் இருவரும் பேசிக் கொண்டே வந்தபோது குளிர்ந்த காற்று அடித்தது.

இருவரும் திரும்பிப் பார்த்தீர்கள்.

கடற்கரைத் தூணில் கழுகு ஒன்று சிறகை விரித்தபடி உட்கார்ந்திருந்தது.

உடனே மழை பொழியத் தொடங்கிற்று.

அப்போது நீங்கள் வந்த இடத்தருகே துர்க்கையின் கோவில் ஒன்று இருந்தது. அந்தக் கோவிலுக்குள்ளே நீங்கள் இருவரும் நுழைந்தீர்கள்.

அந்தக் கோவிலுக்குள் நுழைந்ததும் உன் மனநிலையே மாறுபட்டது.

எந்தப் பெண்ணையும் அனுபவிக்க வேண்டும் என்று நினைக்கும் உனக்கு, பவளவல்லியை மணந்து கொள்ளவேண்டும் என்ற எண்ணம் உண்டாயிற்று.

களவியல் முறையில் அவளை அங்கேயே மணந்து கொள்வது என்று முடிவு கட்டினாய்.

வெளியிலே மழை கடுமையாய்ப் பெய்து கொண்டிருந்தது.

வெகுநேரம் வரையிலே நீ உன் மனத்தோடு போராடினாய்.

அப்போது நீ ஒரு காமுகனாய் இல்லை; ஓர் உத்தமமான காதலனாகவே இருந்தாய். அது அதற்கும் முந்திய ஜென்மத்தில் துர்க்கை உனக்கு அளித்த வரம்.

நீண்ட நேரப் போராட்டத்துக்குப் பிறகு மழை நின்றுவிடுமோ என்ற பயம் உனக்கு வந்தது.

'இப்போது பிரிந்துவிட்டால், இனி எப்போதும் இந்த வாய்ப்புக் கிடைக்காது' என்று நீ முடிவு கட்டினாய்.

திடீரென்று பவளவல்லியின் கையைப் பிடித்துக் கொண்டு துர்க்கையின் சந்நிதியருகே சென்றாய். நீ ஒரு பெண்ணை என்ற நிலையிலேயே அதற்கும் அவள் சம்மதித்தாள்.

இருவரும் சந்நிதானத்தில் மண்டியிட்டுத் துர்க்கையை வணங்கினீர்கள்.

ஏன் எதற்காக என்று எதுவும் சொல்லாமல் பிறகு நீ சந்நிதானத்துக்கு உள்ளே சென்று, துர்க்கையின் கழுத்தில் இருந்த நகையையும், மாலையையும் கழற்றினாய். இரண்டையும் அவள் கழுத்தில் அணிவித்தாய்.

அவள் பயந்தாள். 'எதற்காக?' என்று கேட்டாள்.

'இது தேவிக்குப் பிரியமானது' என்றாய். 'இது ஒரு வகை வழிபாடு' என்றாய். 'வழிபாடு செய்பவர் இருந்தால் இப்படித்தான் செய்வார்' என்றாய்.

திடீரென்று அவளை மார்போடு அணைத்தாய். நீ ஓர் ஆடவன் என்பதைக் காட்டிக் கொண்டு விட்டாய்!

நடைபெற்றது களவியல் இருமணம் என்று அறிந்ததும் அவள் கொதித்தாள்; சீறினாள்.

கழுத்தில் இருந்த மாலையையும் நகையையும் கழற்றித் துர்க்கையின் முகத்திலேயே வீசியடித்தாள்.

அவை போய் விழுந்ததில் கால காலங்களாக அங்கு எரிந்து கொண்டிருந்த நந்தா விளக்கு ஒன்று அணைந்தது.

கேவலமான வார்த்தைகளால் உன்னை ஏசிய அவள், கொட்டும் மழையில் கோவிலை விட்டு வெளியே ஓடினாள்.

அவளைப் பிடிக்க வேண்டும் என்று உனக்குத் தோன்றவில்லை. ஆனால் கடைசிவரை அவள் உனக்குக் கிடைக்கவில்லை.

வேறு திருமணமும் இல்லாமல் அவள் கன்னியாகவே வாழ்ந்தாள்.

அவளைப் பலவந்தப் படுத்தவும் நீ விரும்பவில்லை.

தன்னுடைய நகையை அவள் விசியடித்ததால் நூர்க்கைக்கு அவள் மீது கோபம் உண்டாயிற்று.

அதன் விளைவாகவே இந்த ஜென்மத்தில் அவள் உன் மனைவி பத்மாவதியாக வந்து அலட்சியப்படுத்தப்படுகிறாள்.''

— என்று நிறுத்தினார் ராஜசேகர சுவாமி.

''நல்லது சுவாமி. இந்தக் குழந்தையின் கதை என்ன?'' என்று ஆவலோடு கேட்டார் சேரமான்.

யூஜியானுவிடம் குறத்தி சொன்ன அதே கதையை அப்படியே சொன்னார் ராஜசேகர சுவாமி.

பவளவல்லியின் காதல் தோல்வியால் விரக்தியும் வேதனையுமுற்றுக் காமமே தலையாகக் கொண்டு கடற் பயணம் செய்ததாகவும், மெக்காலி நாட்டு ஜீனுவை அந்த வெறியிலேயே அபகரிக்க விரும்பியதாகவும், அவள் கடலில் குதித்ததாகவும், கபாடபுரம் அழிந்ததாகவும், அவள் வயிற்றுக் குழந்தையே யூதப் பெண்ணின் வயிற்றில் இருப்பதாகவும், இமைகூடப் பிசகாமல் அவர் சொல்லி முடித்தார்.

ஓடிக்கொண்டிருந்த குதிரையின் இருதயத்தை விடவும் வேகமாகச் சேரமானின் இருதயம் அடித்துக் கொண்டது.

''இதற்கு என்ன சுவாமி பரிகாரம்?'' என்று பரிதாபமாகக் கேட்டார்.

''கடந்த காலம், எதிர்காலம் இரண்டையும் சொல்வது என் பழக்கமே தவிர பரிகாரம் சொல்வது என் பழக்கமல்ல'' என்றார்.

''எனக்காகச் சொல்லுங்களேன்...'' என்று கெஞ்சினார் சேரமான்.

''யாரைக் கேட்டாலும் இதற்கு அவர்கள் சொல்லக் கூடிய பரிகாரம் ஒன்றுதான்: அந்த யூதப் பெண், பிள்ளையை ஈன்றெடுப்பதற்கு முன்னால் அவளை இஸ்ரவேல் நாட்டுக்குத் திருப்பி அனுப்பிவிடுவது ஒன்றே இதற்குப் பரிகாரம்'' என்றார்.

''ஐயோ! சுவாமி!'' என்றார் சேரமான்.

நிமித்திகர் அமைதியாக, ''எனக்குத் தெரிந்ததைச் சொன்னேன்'' என்றார்.

யூஜியானு! அந்தத் தங்கச் சிலையை மீண்டும் இஸ்ரவேலுக்குத் திருப்பியனுப்புவதா? நினைத்துப் பார்க்கவே முடியவில்லையே! சேரமான் கண்கள் கலங்கின.



சைக்கிளில் 'டபுள்ஸ்' போகக் கூடாது என்ற ஒரு சட்டம் நேர்க்கண்ட ஆறு நகரங்களுக்கு மட்டுமே செல்லுபடியாகும்.

சென்னை, மதுரை, கோவை, சேலம், திருச்சி, திருநெல்வேலி.

ஆதாரம்: நவசக்தி. கூறியது கண்ணதாசன்

தகவல்: ஸ்ரீரங்கம் ரா. ராகவன்.

---

''இந்தக் காரியத்தை நீ செய்யாவிட்டால் அழிவிலிருந்து நீ தப்பவே முடியாது'' என்றார் நிமித்திகர்.

சேரமான் பதில் பேசவில்லை.

''எப்படியோ சேரநாடு சிதறுண்டு போவது போலவும், சேர வம்சம் திசை தப்பிப் போவது போலவும் எனக்குத் தோன்றுகிறது'' என்றார் நிமித்திகர். ''உனக்குப் பிடிக்காத விஷயங்களை நான் சொல்லியிருந்தால் என்னை மன்னித்துவிடு'' என்றார்.

''இல்லை சுவாமி! அப்படியொன்றுமில்லை!'' என்றார் சேரமான்.

பிறகு இருவருமே பேசவில்லை.

ரதங்கள் திருவஞ்சைக்களத்துக்கு வந்து சேர்ந்தன.

கலங்கிய நிலையில் இறங்கிய சேரமானை, யாரும் அர்த்தத்தோடு கவனித்துப் பார்க்கவில்லை.

பயணத்தின் களைப்பே அவரது முக வாட்டம் என்று எண்ணினார்கள்.

நிமித்திகர் புலித் தோலை விரித்து அமர்ந்தார்.

அப்போது காவலர்கள் சிலர் ஒரு குறத்தியைக் கட்டி இழுத்துவந்தார்கள்.

''எவ்வளவு சொல்லியும் கேளாமல் இந்தக் குறத்தி கோட்டை வெளியில் நுழைந்தாள்'' என்று சேரமானிடம் முறையிட்டார்கள்.

அவள் யூஜியானுவுக்குக் குறி சொன்ன அதே குறத்தி.

''சரி சரி. அவளை விட்டுவிடுங்கள்'' என்றார் சேரமான்.

அவளைப் பார்த்து, ''ஏ குறத்தி! தர்மம் எப்படி இருக்கிறது?'' என்று கேட்டார் நிமித்திகர்.

''ஊசலாடிக் கொண்டிருக்கிறது!'' என்று சொல்லிவிட்டு வெளியேறினாள் குறத்தி.

(தொடரும்)

# சிரிக்கத் தெரிந்த சீடர்கள்!



## கல்லூரிக் கதை-3

இருபத்தெட்டு வருட 'சர்வீஸில்' நான் பன்னிரண்டு கல்லூரிகளிலும், இரண்டு சர்வகலாசாலைகளிலும் பணியாற்றியுள்ளேன். சர்க்கஸ் நிபுணர்கள் ஊர் ஊராக 'டேரா' போடுவது போல் இரண்டு வருடங்களுக்கு ஒரு தடவை நான் இடம் மாறிக் கொண்டிருந்தேன். அவ்வளவு அழகாக இருந்தன அந்தக் காலத்து 'சர்வீஸ் கண்டிஷன்கள்'!

நிற்க, மாணவர்கள் எங்கும் மாணவர்கள் தான்! அவர்கள் நகைச்சுவை உணர்ச்சியே தனி. வெளிப்படையாக நான் சில சமயம் அவர்கள் 'வாலுத்தனங்களை'க் கண்டித்த போதிலும், உள்ளூற அவர்கள் செயலைக் கண்டு மகிழ்ந்திருக்கிறேன். என்றுமே விஷமம் செய்ததற்காக நான் எந்த மாணவனையும் தண்டித்ததில்லை.

அது ஓர் எஞ்சினீரிங் கல்லூரி. வருட ஆரம்பத்தில் 'ராகிங்' பிரமாதமாக நடக்கும். ஒரொரு சமயம் எல்லையை மீறின செயல்களில் மாணவர்கள் ஈடுபட்டதுண்டு. ஆனால் சாதாரணமாக ஆபத்தில்லாத 'பிராக்டிகல் ஜோக்'குகளுடன் நிறுத்திக் கொள்வார்கள்.

ஆந்திராவைச் சேர்ந்த ஆஞ்சநேயலு பழம் பெரும் மாணவன். ஐந்து வருடப் படிப்பைப் பத்து வருடங்களில்கூட முடிக்காத மேதை. ஹாஸ்டலில் அவனுக்குத் தனி மதிப்பு, சலுகை எல்லாம் உண்டு. ஜோதிலட்சுமி படங்களில் ஒன்றுகூட விடமாட்டான். விடிய விடிய சினிமாப் பார்த்துவிட்டு எட்டு மணி வரையில் உறங்குவான். அவன் வகுப்புக்குப் போனாலும் போகாவிட்டாலும் 'அட்டெண்டன்ஸ்' கிடைத்துவிடும். (அவனுடன் ஒரு காலத்தில் படித்த பலர், இடைக்காலத்தில் ஆசிரியர்களாக மாறியிருந்தனர்!)

வழக்கம் போல் ஆஞ்சநேயலு சினிமாப் பார்த்துவிட்டு நிம்மதியாகத் தூங்கிக் கொண்டிருந்தான்.

ஜூனியர் பிள்ளைகளை 'ராக்' செய்து கொண்டிருந்த ஸீனியர் மாணவர்களுக்கு ஒரு யோசனை தோன்றிற்று. அப்பாவிகளான புதுப் பிள்ளைகளிடம், "உங்களுக்குச் சுவர் எழுப்பத் தெரியுமா?" என்று வினவினார்கள். எதிர்பார்த்தது போல் 'தெரியாது' என்று விடை பகர்ந்தார்கள், நடுங்கிச் செத்துக் கொண்டிருந்த ஜூனியர்கள்.

"ஒரு குட்டிச்சுவர் கட்டத் தெரியாத நீங்கள் எஞ்சினீரிங் கல்லூரியில் படித்துக் கிழித்த மாதிரிதான். எங்களுடன் வாருங்கள்; சுவர் கட்டச் சொல்லித் தருகிறோம்" என்று அதிகார தொனியில் அதட்டினார்கள் பெரிய பிள்ளைகள்.

அடுத்த பத்து நிமிடங்களில் கல்லூரி 'காம்பவுண்டு'க்குள் கட்டட வேலைக்காக அடுக்கி வைக்கப்பட்டிருந்த செங்கற்கள் அத்தனையும் ஹாஸ்டலுக்குள் வந்து சேர்ந்தன. சிமெண்டு மூட்டை வேறு.

ஸீனியர் மாணவர்கள் சொல்லித் தர, பரம சீடர்களான ஜூனியர்கள் இரவோடு இரவாக ஆஞ்சநேயலு தூங்கிக் கொண்டிருந்த அறைக் கதவுக்கு முன்னால், அதைத் திறக்க முடியாதபடி, பெரும் சுவர் எழுப்பி விட்டார்கள்!

காலையில் எட்டு மணிக்குத் துயிலெழுந்த ஆஞ்சநேயலுவுக்கு ஒரே குழப்பம். கதவு திறக்க மறுத்தது. இடுக்கு வழியாகப் பார்த்த போது ஒரு சுவர் தெரிந்தது. தான் எங்கே இருக்கிறோம் என்று பிடிபடாத அவன் சுந்தரத் தெலுங்கில் 'குய்யோ முறையோ' என்று கத்தினான். கடைசியில் கல்லூரி பிரின்ஸிபால் உள்படப் பல பேர் வந்து சுவரை இடித்து ஆஞ்சநேயலுவுக்கு விடுதலை தந்தார்கள். புதுப் பிள்ளைகளுக்குக் கட்டடம் கட்டுவதில் 'பிராக்டிகல் டிரெயினிங்' தந்த ஸீனியர் மாணவர்களைத் தண்டிக்க முடியுமா என்ன?

பேராசிரியர் அனுமந்தராவிடம் பிள்ளைகளுக்கெல்லாம் ஒரே காட்டம். தராசில் அளந்து மார்க் போடுவார், மனுஷன். எப்பொழுதும் கடுகடுவென்று இருப்பார். மாணவர்களிடம் சீறி விழுகையில் அகராதியில் இல்லாத வார்த்தைகளையெல்லாம் தாராளமாகப் பிரயோகிப்பார். அவரைச் சும்மா விடுவார்களா போக்கிரி மாணவர்கள்?

உள்ளூர் 'பர்னிச்சர் மார்ட்'டுக்குப் போனார்கள். பேராசிரியர் பெயரில் பெரிய பெரிய அலமாரிகளுக்கும், நாற்காலி வகையறாக்களுக்கும் 'ஆர்டர்' தந்தார்கள். ஞாயிற்றுக்கிழமையன்று அத்தனை பொருள்களையும் கண்டிப்பாக வீட்டில் 'டெலிவர்' செய்ய வேண்டும் என்று கட்டளை பிறப்பித்தார்கள்.

ஆசார அனுஷ்டானங்களில் நம்பிக்கையுள்ள அனுமந்தராவ் கோயிலுக்குக் கிளம்புகையில், அலமாரிகளும் மேஜைகளும் அவர் அனுமதியின்றியே வீட்டுக்குள் நுழைந்து கொண்டிருந்தன. முன்கோபியான ராவ் கன்னுபின்னுவென்று கத்த, லாரிக்காரன் அதைவிடச் சூடாகப் பதில் சொல்ல ஒரே ரகளையாகிவிட்டது. கல்லூரி தண்ணீர் 'டாங்கி'ற்குப் பின்னால் ஒளிந்து



விஜயா பாலகிருஷ்ணன்

கொண்டு இதை வேடிக்கை பார்க்க மாணவ மணிகள் அடைந்த மகிழ்ச்சி தான் என்னே !

'வைஸ் சான்ஸலர்' வராகசாமியையும் விட்டு வைக்கவில்லை மாணவர்கள். அவர் பெயரில் அத்தனை பேராசிரியர்களுக்கும் விருந்துக்கு அழைப்பு விடுத்தார்கள். பெரும் புள்ளி ஒருவர் முக்கிய விருந்தினராக வருவதால், அனைவரும் 'பார்மல்' டிரஸ்ஸில் வர வேண்டும் என்று குறிப்பிடப்பட்டிருந்தது. அதாவது, நீண்ட கறுப்புக் கோட்டும், கால் பிடித்த பைஜாமாவும். பல பேராசிரியர்களிடம் இந்த மாதிரி உடை இருக்கவில்லை. புதிதாகத் தைத்தார்கள். சம்ஸ்கிருதப் பேராசிரியர் ராமபத்ர சாஸ்திரி தம் வாழ்நாளில் ஒரு தடவைகூட 'கால் குழாய்' அணிந்து பழக்கமில்லாதவர். அவர் குறுகிய குழாய்க்குள் நுழைந்து நிமிர்வதற்குள் பாதி உயிர் போய்விட்டது ! வி.ஸி.யை ஒருபாட்டம் திட்டினார் என்று சொல்லவும் வேண்டுமா?

அத்தனை பேராசிரியர்களும் குறித்த வேளையில் வி.ஸி.யின் லாட்ஜ் முன் ஆஜரானார்கள். முதலில் குழம்பினை வராகசாமி, விரைவில் விழித்துக் கொண்டார். விஷமக்கார மாணவர்களுக்கு ஒரு பாடம் கற்பிக்கத் தீர்மானித்தார். வந்திருந்த விருந்தினர்களுக்கு நிஜமாகவே கல்யாணச் சாப்பாடு போட்டதுடன், 'நோட்டீஸ் போர்டி'ல் தம் அழைப்பை ஏற்று விடுதிக்கு வந்த பேராசிரியர்களுக்கு நன்றியும் தெரிவித்தார். மாணவர்கள் முகத்தைப் பார்க்க வேண்டுமே ! மதுரையில் நான் வேலை பார்க்கையில் என்னிடமும் தங்கள் கைவரிசையைக் காட்டத் தவறவில்லை பொல்லாத பிள்ளைகள்.

வகுப்பு தொடங்குவதற்குமுன் இரு நிமிட மௌனம் அனுஷ்டிக்க வேண்டினார்கள்.

'' ஏன் ?'' என்றேன், ஒன்றும் புரியாமல்.

''நம்ம 'ஜோ'செத்துப் போய்விட்டான்!''

எனக்குத் தூக்கிவாரிப் போட்டது. ஒரு கணம் பேசவே முடியவில்லை. ''எப்படி?''

''திருமங்கலத்திலிருந்து தினம் ரயிலில் வருபவனுச்சே ! ஓடும் ரயிலிலிருந்து தவறி விழுந்து விட்டான். நல்ல பையன் ஸார்!'' என்று சொல்லித் தன் கண்களைத் துடைத்துக் கொண்டான் என்னிடம் விஷயத்தைச் சொன்ன மாணவன். மற்றப் பிள்ளைகளும் கண்களைத் துடைத்துக் கொண்டார்கள்.

'ஜோ' உண்மையில் ரொம்பத் தங்கமான பிள்ளை. அவனுடைய நிஜப் பெயர் ராஜகோபாலன். இரட்டை நாடி சரீரம் படைத்த அவனுக்கு 'பிக்விக் பேப்பர்ஸ்' கதையில் வரும் பருத்த பையன் 'ஜோ'வின் பெயரைத் தந்து கௌரவித்திருந்தார்கள் மாணவர்கள். ஆசிரியர்கள்கூட 'ஜோ' என்று அழைக்கும் அளவுக்குப் பிராபல்யம் அடைந்திருந்தான்!

நான் 'ஜோ'வின் நல்ல குணங்களைப் பற்றிப் பேசினபின் இரண்டு நிமிட மௌனம் அனுஷ்டிக்கச் சொன்னேன். இரண்டு நிமிடங்கள் முடிந்தவுடன் கட்டடமே அதிர்ந்தது.

நெற்றியில் திருநீறு பளபளக்க, கையில் தூக்குப் பாத்திரத்துடன், கதவருகில் காட்சி தந்தான் 'ஜோ'. திருமங்கலத்திலிருந்து வரும் ரயில் அன்று தாமதித்து வந்திருந்தது !

# ராஜாஜி சிலைக்கு நிதி

(9-9-76 முதல் 12-10-76 வரை)

| பெயர் | ரூ. | பை. |
|---|---|---|
| முன் வசூல் ரூ. | 3503 | 00 |
| ஃபுட் கார்ப்பொரேஷன் ஆப் இந்தியா ஊழியர், சென்னை துறைமுகம் | 43 | 00 |
| ஏ. மூர்த்தி, கல்கி ஏஜண்டு, அனகாபுத்தூர் | 5 | 00 |
| ஆர். வி. சந்திரன், பம்பாய் | 5 | 00 |
| எஸ். சீனிவாசன், சேலையூர் | 5 | 00 |
| எஸ். ராஜகோபாலன், பம்பாய் | 5 | 00 |
| எம்.வி.ஆர். தங்கபாண்டியன், மதுரை | 6 | 00 |
| கே.ஆர்.அன்னமராஜா, கல்கி ஏஜண்டு, ராஜபாளையம் | 10 | 00 |
| ஜி. பூஷணம், பெங்களூர் | 5 | 00 |
| எம். ஏ. நாராயணன், பம்பாய் | 5 | 00 |
| என். கணபதி, புதுதில்லி | 20 | 00 |
| என்.சுந்தரவரதரெட்டி, சாத்தனூர் கிராமம் | 50 | 00 |
| ஏ.தேவராஜன், மூங்கில்துறைப்பட்டு | 10 | 00 |
| டாக்டர் வி. சங்கரன், பொள்ளாச்சி | 10 | 00 |
| ஜி. ரேணைன், மதுரை | 5 | 00 |
| பி. ஆர். பழநியப்பன், திருவாரூர் | 5 | 00 |
| ஆர்.கே.நரசிம்மன், ஒண்டிப்புத்தூர் | 10 | 00 |
| ஜி. ராமமூர்த்தி, ஒரத்தநாடு | 5 | 00 |
| கலைமகள் அச்சகம், திருச்செந்தூர் | 5 | 00 |
| எஸ். ஆழ்வார் ரெட்டியார், நாகர்கோயில் | 5 | 00 |
| வி. ராமசாமி, பம்பாய் ஏ.பி.ஒ. | 10 | 00 |
| ஏ.எம்.கோகுலநாதன், கல்கி ஏஜண்டு, அந்தியூர் | 5 | 00 |
| வி. என். சுப்பிரமணியன், புதுதில்லி | 11 | 00 |
| ஜான் கில்பர்ட், மதுரை | 5 | 00 |
| மெஸர்ஸ். டி.பி.என். சுப்பிரமணியன் செட்டியார், சித்தோடு | 10 | 00 |
| கே. ஸ்ரீநிவாஸராவ், நடுவக்களப்பாள் | 5 | 00 |
| டி. கே. சௌமிய நாராயணன், குரோம்பேட்டை | 5 | 00 |
| ஏ. வி. நாகராஜன், புதுதில்லி | 15 | 00 |
| ஸ்ரீமதி லீலா செல்லையா, . . பனஜீ—கோவா | 5 | 00 |
| பி. வெங்கடராமன், வெள்ளமடை | 5 | 00 |
| எஸ். சுப்பராவ், தாராபுரம் | 5 | 00 |
| டி. ஸ்ரீநிவாஸராகவன், திருச்சி | 10 | 00 |
| எஸ். சேஷாத்ரி, பம்பாய் | 25 | 00 |
| எஸ். நாராயணன், குன்னூர் | 5 | 00 |
| வி. மாசிலாமணி, திருவொற்றியூர் | 15 | 00 |
| எஸ். கோபாலகிருஷ்ணன், திருநெல்வேலி | 10 | 00 |
| எஸ். நாராயணன், தூர்க்காபூர் | 5 | 00 |
| பி. பத்மநாபன், கல்கத்தா | 5 | 00 |
| கே. எஸ். கங்காதரன், பம்பாய் | 5 | 00 |
| ஏ. ஆர். கே. மூர்த்தி, கோவை | 6 | 00 |
| பி. ஏ. பெரியசாமிப்பிள்ளை, திருச்சி | 15 | 00 |
| இந்திரா அனந்தநாராயணு, செகந்திராபாத் | 100 | 00 |
| கே. நாராயணன், திருமங்கலம் | 5 | 00 |
| டி. வி. சுந்தரராஜன், பொராக்கோ-நியூகினியா | 25 | 00 |
| இந்து சமய இளைஞர்மன்றம், சென்னை | 5 | 55 |
| ஜெமினி மஹாதேவன், திருவல்லிக்கேணி | 5 | 00 |
| சி. வைத்தியநாதன், கும்பகோணம் | 5 | 00 |
| பி. பிருஹஸ்பதி, கோயமுத்தூர் | 10 | 00 |
| முப்பத்திக்கோட்டகம், நடுப்பண்ணை கரூர் | 9 | 31 |
| ஆர். எஸ். பூவராகன், கடப்பேரி | 5 | 00 |
| வி. பூதலிங்கம்பிள்ளை, தோவாளை | 11 | 00 |
| ஜி. நடராஜன், கல்கி ஏஜண்டு திருவாரூர் | 5 | 00 |
| பி. எஸ். ரகுராமன், ராஜகோபாலன் வாலாஜாபாத் | 20 | 00 |
| வி. சுப்பிரமணியன், கிருஷ்ணகிரி | 5 | 00 |
| எம். எஸ். கோபால அய்யர் திருவிடைமருதூர் | 5 | 00 |
| ஜி. பாலா, அபிராமபுரம் | 101 | 00 |
| எம். எஸ். வி. ராமன், மதுரை | 51 | 00 |
| டி. ஏ. குப்புசாமி, பவானி | 25 | 00 |
| என். மாணிக்கம் .. | 10 | 00 |
| மெஸர்ஸ். என்.கே. வெங்கடாசல முதலியார் .. | 10 | 00 |
| பி. கே. நல்லசாமி .. | 10 | 00 |
| பிரபாத் இண்டஸ்ட்ரியல்ஸ் .. | 10 | 00 |
| ஜி. குருமூர்த்தி, குருவரெட்டியூர் | 10 | 00 |
| பி. எஸ். ரங்கசாமி, பவானி | 5 | 00 |
| ஸ்ரீமதி ஆர்.லக்ஷ்மிஅம்மாள் .. | 5 | 00 |
| பி. வி. வெங்கடரமணன், .. | 5 | 00 |
| பி. கே. மணி .. | 5 | 00 |
| அப்பாய் காப்பி ஒர்க்ஸ் .. | 5 | 00 |
| வி. கோவிந்தராஜுலு .. | 5 | 00 |
| பி. ஆர். வெங்கடரமணன் .. | 5 | 00 |
| டி. வி. ராமசேஷன், .. | 5 | 00 |
| பவானி நடேசன், .. | 5 | 00 |
| பி. என். பெருமாள்சாமி, கோவை | 5 | 00 |
| ஆர். ரமணி, சென்னை | 11 | 00 |
| ஆர். சம்பத், பம்பாய் | 10 | 00 |
| நேமம் டி. சு. சாரங்கபாணி, சென்னை | 33 | 39 |
| நேமம் டி.ராஜகோபாலன், .. | 11 | 16 |
| எஸ். கந்தஸ்வாமி, பம்பாய் | 51 | 00 |
| இரு நண்பர்கள், சென்னை | 20 | 00 |
| அகிலன், சென்னை | 25 | 00 |
| டி.எஸ்.ஸ்ரீகாந்தன், அமுதா ஸ்ரீகாந்த் குரோம்பேட்டை | 8 | 00 |
| லயன் பி. திருவாசகம், இளம்பிள்ளை | 6 | 00 |
| எஸ். கிருஷ்ணஸ்வாமி மயிலாப்பூர் | 5 | 00 |
| லூகாஸ் டி.வி.எஸ். அன்பர்கள் அம்பத்தூர் | 101 | 00 |
| கர்னல் எம். எஸ். ராவ், புதுதில்லி | 50 | 00 |
| கர்னல் ஆர். டி. அய்யர், புதுதில்லி | 50 | 00 |
| பிசஎம்எல் தமிழ் மன்றம், பெங்களூர் | 25 | 00 |
| மொத்த வசூல் ரூ. | 4798 | 41 |

# சிலம்புச் செல்வம்



ம.பொ.சி

கோவலன் பாடிய பாணியிலேயே தானும் பாட நினைத்து, அவனிடமிருந்து யாழை வாங்கிய மாதவியாள், அவன் பாடியது போன்றே முதலில் ஆற்று வரிப் பாடல்களைப் பாடுகின்றாள். அந்தப் பாடல்கள் :

மருங்கு வண்டு சிறந்தார்ப்ப மணிப்பூ
  ஆடை அது போர்த்துக்
கருங்கயற்கண் விழித்து ஒல்கி
  நடந்தாய் வாழி காவேரி !

கருங்கயற்கண் விழித்துஒல்கி
  நடந்த வெல்லாம் நின் கணவன்
திருந்து செங்கோல் வளையாமை
  அறிந்தேன் வாழி காவேரி !

பூவர் சோலை மயிலாலப்
  புரிந்து குயில்கள் இசைபாடக்
காமர் மாலை அருகசைய
  நடந்தாய் வாழி காவேரி !

காமர் மாலை அருகசைய
  நடந்தவெல்லாம் நின் கணவன்
நாம வேலின் திறங்கண்டே
  அறிந்தேன் வாழி காவேரி !

வாழி யவன் தன் வளநாடு
  மகவாய் வளர்க்குந் தாயாகி
ஊழி யுய்க்கும் பேருதவி
  ஒழியா தொழுகல் உயிரோம்பும்
ஆழி யாள்வான் பகல் வெய்யோன்
  அருளே வாழி காவேரி !

கோவலனும் மாதவியும் பாடும் ஆற்று வரிப் பாடல்கள் இளங்கோவின் படைப்புக்களே என்றாலும், வருணனையிலே கோவலனை மாதவி விஞ்சி நிற்கச் செய்து விட்டார்.

புனல் வடிவமான காவிரியாள் பூவாடை போர்த்து ஒய்யார நடை போடுகிறாள்—என்பது மாதவியின் வருணனை. கண்களைத் திறப்பதும் மூடுவதுமாக வேடிக்கை காட்டுகிறாள் காவிரியாள். காவிரியாற்றின் இரு கரையிலும் உள்ள சோலைகளிலே குயில்கள் பாடுகின்றன; மயில்கள் அகவுகின்றன.

கோவலன் தன்னுடைய ஆற்று வரிப் பாடல்களிலே, பெண்ணினத்தின் கற்பைப் பெருமைப்படுத்திப் பாடியதனை மாதவி ஏற்றாள். அவளது காதல் வாழ்க்கை கற்புக்கு விலக்கானதல்ல வாதலால். ஆனால், மனைவி கற்பைக் கடைப்பிடிக்க வேண்டுமானால், அதனைக் கணவனும் கடைப்பிடித்தாக வேண்டும் என்று சொல்லாமல் சொல்லுகின்றாள். ''கருங்கயற்கண் விழித்தொல்கி நடந்தவெல்லாம் நின் கணவன் திருந்து செங்கோல் வளையாமை அறிந்தேன் வாழி காவேரி'', என்பது கோவலனுக்கு மாதவி தந்த பதிலாகும்.

அவள் வெளிப்படுத்திய உணர்வும் பொருளும் அவளுடையவை அல்ல. அவள் ஏற்றுக் கொண்ட பாட்டுடைத் தலைவியினுடையவை ஆகும். ஆயினும், கோவலனை ஏமாற்றுவான் வேண்டி, தானே அந்தப் பாத்திரமாகி, மனமுருகிக் கானல் வரி பாடினாள். அதிலே, தலைவனின் வரவை எதிர்பார்த்து, தான் சொல்லிச் சென்ற கால எல்லைக்குள் அவன் வராததால் ஏமாந்த தலைவியின் உணர்வை வெளிப்படுத்தி மாதவி பாடிய பாடல்களிலே ஒரு பாடல் வருமாறு :

தம்முடைய தண்ணளியும்,
  தாமும் தம் மான் தேரும்,
எம்மை நினையாது, விட்டாரோ ?
  விட்டு அகல்க ;
அம்மென் இணர
  அரும்புகாள்! அன்னங்காள்!
நம்மை மறந்தாரை
  நாம் மறக்க மாட்டேமால் ?

சொன்ன காலத்தில் வராததால் கடல் தெய்வத்தின் மீது அவன் செய்த சத்தியம் பொய்த்துவிட்டது. அதனால், சினங்கொண்ட கடல் தெய்வமானது தன் காதலன் என்றேனும் ஒரு நாள் மரக்கலத்தின் வாயிலாகத் திரும்பி வரும்போது, அந்த மரக்கலத்தைக் கவிழ்த்து அவனைத் தண்டித்துவிடுமோ என்று பாட்டுடைத் தலைவி அஞ்சுகின்றாள். அப்படிச் செய்யாமல் தலைவனை மன்னித்து விடுமாறு வேண்டிக் கடல் தெய்வத்தைக் கெஞ்சுகிறாள்:

' பூக்கமழ் கானலில்
  பொய்ச் சூள் பொறுக்க' என்று
மாக்கடல் தெய்வம் !
  நின்மலரடி வணங்குதும்

கோவலனோடு போட்டியிட்டு, தானும் கோவலன் அல்லாத வேறொருவனைக் காதலித்தவள் போல் மாதவி பாடியது அவள் மனமறிந்து நடத்திய போலி நாடகம். ஆயினும், கோவலன் இதனை அறியாதவனாகி, அவளைத் தழுவியிருந்த கையை நழுவவிட்டு, பகற்பொழுது முடிந்து கொண்டிருந்த அந்திமாலை நேரத்திலே மாதவியோடு தான் நடத்திய காதல் வாழ்க்கைக்கும் பொழுது முடிந்து விட்டதென்று சொல்லாமல் சொல்பவன் போல் அவளை விட்டுப் பிரிந்து சென்றான்.

சிலப்பதிகாரத்திலே, வில்லன் பாத்திரம் நடமாடவில்லை. அப்படிப்பட்ட வில்லன் பாத்திரமாக ஊழ்வினையைப் பயன்படுத்துகிறார் இளங்கோ. கோவலனுடைய ஊழ்வினையான வில்லன் பாத்திரம் முதன் முதலில் வேலை செய்யத் தொடங்கியது, கானல் வரிப் பாடல் காரணமாக அவன் மாதவியை விட்டுப் பிரிந்தபோதுதான். (தொடரும்)

Printed and published by V. Vaidyanathan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-600 031.
Managing Editor: T. Sadasivam. Associate Editor: K. Rajendran.



முற்போக்குடைய
இளந் தாய்மார்கள் மேலும்
மேலும் உபயோகிப்பது
ஏனெனில் இதில்

**விவா**

போஷாக்குக் கொடுக்கும் அதிகப் பால்
சக்தியைப் பெருக்கும் கூடுதல் மால்ட்
பாட்டிலுக்கு அதிகக் கோப்பைகள்

ViVA
The Action Packed Health Drink
FOR SUSTAINED GOOD HEALTH

**விவா**

கொடுத்து செயல் திறமையை வளர்க்கும் ஆரோக்கியப் பானம்




ASP/JIL-5/76 TAM C

